# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

கார்த்திகை
நவம்பர் – 1977



70 காசு



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை-600 004

## ஒரு வேண்டுகோள்

★ அன்பர்கள் தங்களுடைய சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் சிலரை சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இதன் மூலம் நமக்கும் மற்றவர்களுக்கும் நாம் நன்மையைச் செய்து கொள்கிறோம்.

★ தனிப்பிரதி விற்பனையோ, சந்தா சேர்க்கும் ஏஜண்டுகளோ குறிப்பிடத் தக்க அளவுக்கு இல்லாததால், வாசக அன்பர்களே நண்பர்களைச் சந்தாதாரர்களாக்கி ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

★ ஒவ்வொரு ஆண்டும் சந்தாவைச் செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக, எப்போதும் பத்திரிகை வந்து கொண்டிருக்கும் வகையில் ஆயுள் சந்தாதாராகச் சேர்ந்து விடுவது நலம். ஆயுள் சந்தாதாரராக வசதி இல்லாத அன்பர்கள், சில ஆண்டுகளுக்குச் சேர்ந்தாற்போலவும் சந்தாவை முன்னதாகச் செலுத்தலாம்.

★ சந்தாதாரர்களை அதிகப்படுத்துவதில் தீவிர முயற்சி செய்து வருகிறோம். அன்பர்கள், தங்களின் பங்காக இந்தத் தெய்விகக் கைங்கரியத்தில் கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது மாதந்தோறும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகும்.

★ நண்பர்களுக்கும், அபிமானிகளுக்கும் பத்திரிகை போகும்படி செய்தால் ஒவ்வொரு மாதமும் அவர்களுக்கு நல்ல வெகுமதி அளித்ததாக அமையும்.

★ பந்துக்களுக்கும், குமாரத்திகளுக்கும் பத்திரிகை அனுப்பச் செய்தால் மாதந்தோறும் தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த சன்மானமாகும்.

★ பெரியோர்கள், இந்த வேண்டுகோளைத் தங்களுக்கு ஏதோ சம்பந்தமில்லாதது என்று புறக்கணித்துவிடாமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

### சந்தா விவரம்:

**வருட சந்தா (சிறப்பு மலர் உட்பட) ரூ. 7-00; தனிப்பிரதி 70 காசு; ஆயுள் சந்தா: ரூ. 100 (ஆயுள் சந்தாவைப் பகுதிப் பகுதியாகவோ, மாதம் ரூ. 10 ஆகவோ, மொத்தமாகவோ செலுத்தலாம்.)**

★ சந்தாதாரராக விரும்புபவர்களும் பத்திரிகை விற்பனையாளர்களும் பின்வரும் முகவரிக்குத் தொடர்பு கொள்ளலாம்.

புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது, புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள், தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.



ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : : சென்னை-600 004

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—57 | நவம்பர் 1977 | இதழ்—11 |
|---|---|---|


## பொருளடக்கம்

பக்கம்






# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை
— திருமூலர்

| தொகுதி 57 | பிங்கள ஹு கார்த்திகை மீ | இதழ் 11 |
|---|---|---|


## பிரார்த்தனை

आपत्सु मग्नः स्मरण त्वदीय
करोमि दुर्गे करुणार्णवेशि ।
नैतच्छठत्वं मम भावयेथाः
क्षुधातृषार्ता जननी स्मरन्ति ।

—श्री शंकराचार्यविरचितम्

ஆபத்ஸு மக்ன: ஸ்மரணம் த்வதீயம்
கரோமி துர்க்கே கருணார்ணவேசி |
நைதச்சடத்வம் மம பாவயேதா:
க்ஷுதாத்ருஷார்த்தா ஜநநீம் ஸ்மரந்தி ||

—ஸ்ரீசங்கரர்

ஆபத்துக்களில் அழுந்திய நான் உன்னைச் சிந்திப்பதைச் செய்கிறேன். துர்க்கா தேவியே! கருணைக்கடலின் நாயகியே! இதை என்னுடைய தீய குணமாகக் கொள்ளாதே; பசி, தாகம் ஆகிய கொடுமையால் வருந்துபவர்கள் தாயையே நினைப்பது இயல்பன்றோ?

சீலமுடன் வாழஅருள் செய்யும் தேவி;
செம்மையுளம் எனக்கருளும் செல்வத் தேவி!
ஏலநறுங் குழலியாய் இனிய காஞ்சி,
இன்னகரும் என்னுளமும் அமர்ந்த தேவி;
ஆலமதும் அமுதமென ஆக்குந் தேவி!
அடியனறி யாமையையும் நீக்கும் தேவி!
காலமெலாம் உனைமறவேன் அருளாய் காஞ்சிக்
காமாட்சி யம்மையே போற்றி போற்றி!

—காமாட்சி திருப்பதிகம்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

பகவானின் திருநாமத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே எவனுக்கு மயிர்க்கூச்செடுத்து பக்தியால் கண்ணீர் பெருகுமோ, அவனுக்கு அதுதான் கடைசி ஜன்மமாகும்.

கடவுளை நாடும் ஆத்ம சாதகர்கள் அனைவரும் ஜாதி, குலம், கோத்திரம் ஆகிய சமூகக் கட்டுப்பாடுகளைக் கடந்த ஒரு தனி கோஷ்டியைச் சேர்ந்தவராவார்கள்.

வீடு, வாசல், குழந்தை, குட்டிகள், குடும்பம் இவைகள் எல்லாமே சிறிது காலம் வரைக் கும்தான் நமக்குச் சொந்தமானவை. அவைகள் நிலையற்றவைகள். ஆண்டவன் ஒருவன் மட்டுமே நித்தியம்.

ஒரு பக்தனுடைய பலம் எங்கே இருக்கிறது? அவன் பகவானின் குழந்தை; ஆதலால் பக்தியால் பெருகும் அவனுடைய கண்ணீரே அவனுக்குப் பலமான ஆயுதமாகும்.

படகு தண்ணீரில் இருக்கலாம். ஆனால் தண்ணீர் படகுக்குள் நுழைந்துவிடக் கூடாது. ஆத்ம சாதகன் உலகில் வாழலாம். ஆனால் உலக ஆசை அவனிடம் புகுந்துவிடக் கூடாது.

இலேசான உபயோகமற்றதைத் தள்ளிவிட்டு, கனமான நல்ல பொருளை வைத்துக் கொள்வது, புடைக்கும் முறத்தின் சுபாவம். இதுவே பக்தி உள்ளம் கொண்ட எல்லா மக்களின் சுபாவமும் ஆகும்.

எல்லாவற்றையும் தியாகம் செய்துவிட்டு, பகவானிடம் பக்தி செய்ய வேண்டும் என்ற உபதேசங்களை உலகப்பற்றுள்ளவர்கள் கேட்க மாட்டார்கள். முட்டாள்கள் மாயையின் தோற்றத்தால் மதிமயங்கி உலக வலையில் புகுகிறார்கள்.

உடலில் உள்ள சிரங்கைச் சொறியச் சொறிய நமைச்சலும், சொறிவதில் ஓர் இன்பமும் உண்டாகும். அதுபோல, ஆண்டவனிடம் பக்தி செய்பவர்கள் அவனுடைய புகழைப் பாடுவதில் ஒருபோதும் சலிப்படைவதில்லை.

எல்லாவற்றையும் கடவுளுக்காக அர்ப்பணம் செய்து அவனிடம் சரணமடைந்துவிடு. அதன் பிறகு உனக்கு எந்தவித துன்பமும் இல்லாமல் போகும். அதோடு, அனைத்தும் அவனுடைய திருவருளால்தான் நடைபெறுகின்றன என்பதையும் புரிந்து கொள்வாய்.

பாலத்தின் கீழே தண்ணீர் ஒரு பக்கத்தில் நுழைந்து மற்றொரு பக்கமாக வெளியேறி விடுகிறது. அதைப்போல, மத போதனைகள் உலகப்பற்று நிறைந்த இலௌகிகனுடைய ஒரு காது வழியாக நுழைந்து மற்றொரு காது வழியாக வெளியே போய்விடுகிறது. சிறிதும் அவனிடம் அவை பதிவதில்லை.

முற்றாத மூங்கிலை எளிதில் வளைக்கலாம். முற்றின மூங்கிலைப் பலவந்தமாக வளைக்க முயன்றால் ஒடிந்து போகும். அதுபோல, இளமையில் உள்ளத்தை பகவானை நோக்கிச் செல்லும்படி திருப்புவது எளிது. வயது முதிர்ந்தவனுடைய பழக்கப்படாத மனமோ, அப்படித் திருப்ப முயலும்போதெல்லாம் பிடியை மீறிச் செல்லும்.

ஈயானது ஒரு சமயம் அழுகிக் கிடக்கும் புண் மீது உட்காருகிறது; இன்னொரு சமயம் ஈசுவரனுக்குப் படைப்பதற்காக வைக்கப்பட்டிருக்கும் நைவேத்தியத்தின் மீது உட்காருகிறது. அதுபோல, இலௌகிகனுடைய மனம் ஒரு சமயம் பக்தி விஷயங்களிலும் மற்றொரு சமயம் பெண், பொன் அற்ப சுகங்களிலும் பதிகிறது.



ஓம்



# விஜயதீபம்

## இந்து மதம்

உலகிலேயே மிகமிகப் பழமையானது என்ற பெருமையைப் பெற்ற ஒரே மதம் இந்துமதமே ஆகும். சரித்திர ஆராய்ச்சியாளர்களின் காலக் கணக்குகளை எல்லாம் தாண்டி, மிகமிகப் பண்டைய காலத்தில் தோன்றிய இந்து மதம், இன்றளவும் தனது உயிரோட்டத்தை இழந்து விடாமல் தலைநிமிர்ந்து நின்று கொண்டிருக்கிறது.

தகுதி வாய்ந்தவைகள் மட்டுமே எஞ்சி நிற்கும்; தகுதியற்றவைகள் மறைந்துவிடும்— என்பது உலகத்தைப் பற்றிய பொதுவான ஒரு விதியாகும்.

இந்து மதத்திற்குப் பிறகு, பெரியதும் சிறியதுமாக எத்தனையெத்தனையோ மதங்கள் உலகில் தோன்றியிருக்கின்றன. அவைகளில் சில வலிமையை இழந்திருக்கின்றன. பல அழிந்தும் போயிருக்கின்றன.

பிற மதங்களின் வளர்ச்சிக்குத் துணைபுரிந்த காரணங்களை, இந்து மதம் தனது வளர்ச்சிக்குரிய காரணங்களாகக் கொண்டிருக்கவில்லை.

பாரத மண்ணின் சரித்திரத்தில் ஒரு காலத்திலே, 'உனக்கு இஸ்லாம் மதம் வேண்டுமா? உன்னுடைய உயிர் வேண்டுமா?' என்று வாள் முனையிலே கேட்கப்பட்டதுண்டு. அந்த நிலையில் உயிர் தப்பினால் போதும் என்பதையே மூலதனமாகக் கொண்டு இஸ்லாம் இந்நாட்டில் பரவி இருக்கிறது. அப்படிப்பட்ட இக்கட்டான நிலையிலும் இந்து மதம் பூண்டற்றுப் போகாமல் தப்பிப் பிழைத்து எதிர் நீச்சலிட்டு வந்திருக்கிறது!

இஸ்லாம் சமயத்திற்கு அடுத்ததாக இறக்குமதி செய்யப்பட்ட மதம் கிறிஸ்தவ மதம். கிறிஸ்தவ மதத்தினர் மண், பொன், பெண் ஆகிய சக்திகளைத் தங்களுக்கே உரிய அபாரமான முறையில் பயன்படுத்தி கிறிஸ்தவ மதத்தை வளர்த்தார்கள். வளர்க்கிறார்கள். இந்தியாவில் நிலவிய வறுமையையும் கல்வியறிவின்மையையும் தங்களுக்குச் சாதகமான முறையில் பயன்படுத்தியே காலமெல்லாம் கிறிஸ்தவ மதம் மகத்தான வெற்றி கண்டு வருகிறது. இதுவே இந்தியாவில் கிறிஸ்தவ மதத்தின் சுருக்கமான வரலாறு.

இப்படிக் கிறிஸ்தவ மதம் வளர்ந்த காலத்திலும் இந்து மதம் அழிந்து போகாமல், தனது உயிரோட்டத்தை இழந்து போகாமல் தன்னைக் காப்பாற்றிக்கொண்டு விட்டது!

இவ்விதம் எண்ணற்ற இன்னல்கள் பலமுனைகளிலிருந்து தாக்கியபோதும், இந்து மதம் அழியாததிலிருந்து ஓர் உண்மையை நாம் உணர்கிறோம். அதாவது, இந்து மதம் தகுதி வாய்ந்த ஒரு மதம். மிகப் பெரிய தெய்வீக உண்மைகளாகிய அனுபவங்களை அடிப்படையாகக் கொண்ட மதம் — ஆகவேதான் இது எத்தனை இன்னல்கள் அலைஅலையாக வந்து தன்னைத் தாக்கியபோதிலும் தப்பி வந்திருக்கிறது. இனியும் வாழ்வாங்கு வாழ்ந்து மக்களுக்கு வழி காட்டப்போகிறது.

ஆன்மீக உண்மைகளைத் தெரிவிக்கும் சாஸ்திரங்கள் பலவற்றை இந்து மதம் கொண்டிருக்கிறது. வாழையடி வாழையாகப் பல மகான்கள் இந்து மதத்தில் தோன்றிக்கொண்டே இருக்கிறார்கள். மக்கள் தங்களுடைய பரிபக்குவத்திற்கேற்ப மதத்தில் பெருமளவிற்கோ, குறைந்த அளவுக்கோ ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள்.

சாஸ்திரங்கள், மகான்களாகிய அனுபூதிச் செல்வர்கள், மக்கள் கொண்டுள்ள மத ஈடுபாடு—ஆகிய இவைகளில்தான் இந்து மதத்தின் ஆற்றல் இப்போதும் இருந்துகொண்டிருக்கிறது. இனியும் எப்போதும் இருக்கப் போகிறது.

காகிதம் கண்டுபிடிப்பதற்கு முன்பே—புத்தகங்கள் அச்சிடும் அச்சுப் பொறிகள் நடைமுறைக்கு வருவதற்கும் முன்பே—இந்து மதத்தில் சாஸ்திரங்கள் வழக்கத்தில் இருந்திருக்கின்றன.

புத்தக வடிவில் சாஸ்திரங்களைப் படிக்கும் வாய்ப்பு இப்போது இருக்கிறது. இந்த வாய்ப்பே இல்லாத காலமாகிய பல நூறு ஆண்டுகளை, அந்த வாய்ப்பு இல்லாமலே நமது சாஸ்திரங்கள் கடந்து வந்திருக்கின்றன! ஒருவர் மற்றொருவருக்குச் சொல்ல, ஓலைச்சுவடிகளில் எழுத, இப்படியே சமீப காலம் வரையிலும் சாஸ்திரங்கள் இருந்து வந்திருக்கின்றன.

புத்தக வடிவில் சாஸ்திரங்கள் இல்லாத காலத்தையே கடந்து வந்துள்ள இந்து மத உண்மைகள், இனி எப்போதுமே அழியப் போவதில்லை. இப்போது நமது சாஸ்திரங்கள் புத்தக வடிவில் வந்து கொண்டிருக்கின்றன. எழுத்து வடிவு பெறாத காலத்திலேயே வாழ்ந்த உண்மைகள், நிலையான எழுத்து—நூல் வடிவத்தைப் பெறும் வாய்ப்பையும் பெற்றுவிட்ட பிறகு, மேலும் அமர நிலையையும் புதிய வலிமையையும் பெற்றிருக்கின்றன என்றுதான் சொல்லவேண்டும்.



# ஆறுதல் மொழிகள்

**தூய அன்னை ஸ்ரீ சாரதா தேவியார்**

> சிடர் ஒருவரின் கேள்விக்கு ஸ்ரீ அன்னையார் அளித்த பதில்கள் 'ஆறுதல் மொழிகள்' என்னும் தலைப்பில் இடம் பெறுகின்றன.

முதல் முறையாகத் தூய அன்னையைத் தரிசிக்கும் பாக்கியம் எனக்கு 1907-ல் கிடைத்தது. அடுத்த ஆண்டு மழைக் காலத்தில் ஸ்ரீ அன்னையைக் காண நான் இரண்டாம் முறையாகச் சென்றேன். அப்போது அவர் ஜயராம்பாடியில் இருந்தார். நான் அவ்விடத்தை அடைந்த போது காலை மணி பத்தரை. ஸ்ரீ அன்னையாரின் பாதங்களில் நான் பக்திபூர்வமாக நமஸ்கரித்த பின், அவர் கேட்டார்: ''நீ ம—வின் மாணக்கனா?''

''இல்லை, அம்மா'' என்று பதில் சொன்னேன். ''ஆனால் நான் அவரிடம் அடிக்கடி செல்வதுண்டு.''

''அவர் சௌக்கியமா? சமீபத்தில் பார்த்தாயா?''

''ஆமாம், சௌக்கியமாயிருக்கிறார். ஏழெட்டு நாட்களுக்கு முன்புதான் பார்த்தேன்.''

நான் இரவு உணவு கொள்கையில், நான் (விடுதியிலோ, ஆசிரமத்திலோ, தனியாகவோ இல்லாமல்) வீட்டிலே இருப்பவனா என்று அன்னையார் விசாரித்தார். ''ஆமாம், அம்மா'' என்றேன். ''சமீபத்தில் மிகவும் கஷ்டங்களில் புகுந்து புறப்பட நேர்ந்தது. அபாயகரமாக உடல்நலக் குறைவுற்றேன். பிறகு திருமணம் வந்தது.''

ஸ்ரீ அன்னை: ''நீ கல்யாணமாகிவிட்டவனா?''

நான்: ''ஆம் அம்மா.''

ஸ்ரீ அன்னை: ''மனைவிக்கு என்ன வயது?''

நான்: ''சுமார் பதின்மூன்று.''

ஸ்ரீ அன்னை: ''எதெது நடந்திருந்தாலும் எல்லாம் உன் நன்மைக்கே. இப்போது வருந்திப் பயனில்லை.''

ான்: ''நான் மணம் செய்துகொள்ளக் கூடாது என்று ம—தடுத்துக் கூறியிருந்தார்.''

ஸ்ரீ அன்னை: ''ஹா! அவரே இல்லற வாழ்வில் மிகவும் கஷ்டப்பட்டவரல்லவா? அதனால் தான் உன்னைத் தடுத்திருக்கிறார்.''

நான்: இல்லறத்தானின் வாழ்க்கை சங்கடம் நிறைந்தது. அந்த வாழ்க்கையில் ஒருவன் ஆண்மையையே இழந்து விடுகிறுன்.''

ஸ்ரீ அன்னை: ''நீ சொல்வது முற்றிலும் உண்மை. பணத்துக்காக பறப்பதே கிருஹஸ்த வாழ்க்கை.''



நான்: ''மேலும் பலவித இன்னல்களும் நிறைந்தது.''

ஸ்ரீ அன்னை: ''ஆனுல் குருமகராஜுக்கு இல்லற பக்தர்களும் இருக்கத்தான் செய்கிறுர்கள்; வருத்தப்படாதே அப்பா.''

நான் மௌனமாயிருந்தேன்.

ஸ்ரீ அன்னை: ''என் சகோதரர்கள் கூட கல்யாணமானவர்கள்தாம்.''

நான் ''அவர்கள் மணம் செய்துகொள்ள நீங்கள் அனுமதித்தீர்களா?''

ஸ்ரீ அன்னை: ''வேறென்ன செய்வது? குருமகராஜ் சொல்வார், ''குப்பையில் வாழ்ந்து செழிக்கிற புழுக்களை அரிசிப் பானையில்போட்டு வைத்தால் செத்துவிடும்'' என்று....அந்தக் காலத்தில் நாங்கள் செய்தது போல இக்கால மருமகளிர் மாமனுர்களுக்குப் பணிவிடை செய்வதில்லை.''

நான்: ''காலப் போக்கில் எல்லாமே மாறி வருகின்றன.''

ஸ்ரீ அன்னை: ''உதாரணமாக முன்பெல்லாம் என்னுல் ஒரு எறும்பைக்கூடக் கொல்ல முடியாமலிருந்தது. ஆனுல் இப்போதோ சில சமயம் பூனையைக் கூட அடித்து விடுகிறேன் . . . பயப்படாதே அப்பா! உனக்குக் கல்யாணமானதால் என்ன வந்துவிடும்? குருமகராஜின் சங்கல்பத்தால் உன் மனைவியும் ஆன்மீக நாட்டமுடன் இருப்பாள். அவளுடைய பூர்வ ஜன்ம புண்ணியம் அப்படி இருக்கலாம். 'வித்யை விட அவித்யையே (ஞானத்தை விட அஞ்ஞானமே) அதிக வலு வாய்ந்தது' என்று குருமகராஜ் சொல்வது வழக்கம். அதாவது (அதனுல்தான்), உலகம் முழுதையும் அவித்யை மோகிக்கச் செய்திருக்கிறது.''

1919ஆம் ஆண்டு ஏப்ரல் 20, காலை சுமார் பத்து மணி. பங்கூரா மாவட்டத்திலுள்ள கோல்பாராவில் ஜகதம்பா ஆசிரமத்தில் கடந்த ஒரு மாதமாக இருந்து வரும் ஸ்ரீஅன்னையைக் காண ம, ச என்ற இரு பிரம்மசாரிகளும், சென்னையைச் சேர்ந்த ந—என்ற அன்பரும் சென்றுர்கள். ஆண்களுக்கொன்றும் பெண்டிருக்கொன்றுமாக கோல்பாராவில் இரண்டு ஆசிரமங்கள் உள்ளன. ஸ்ரீஅன்னை பின்னதில் தங்கியிருக்கிறுர்.

ஐந்து மைல் தொலைவிலிருந்த ஜயராம்பாடியில் அன்னையின் மருமான் மாகுவின் பிள்ளை கடுமையான டிஃப்தீரியாக் காய்ச்சலுற்றிருந்தான். அந்தக் குழந்தையைக் குறித்து ஸ்ரீஅன்னையார் மிகவும் கவலையாக இருந்தார்.

மேலே சொன்ன மூவரும் வணங்கி எழுந்ததும், அன்னைக்குப் பேரன் முறையாகும் அக் குழந்தையின் உபாதை பற்றியே பேச்சுத் தொடங்கியது.

ந: ''அம்மா, உங்கள் ஆசியில் அவன் குணமாவான்.''

''குருமகராஜின் ஆசியில்'' என்று அன்னையார் கைகுவித்துச் சொன்னுர்.

ச: ''இவர் (ந) மாகுவின் குழந்தைக்காக நிரம்ப உதவியிருக்கிறுர்.

ஸ்ரீ அன்னை: ''ஆமாம். இவர் நல்ல மனிதர்; கல்கத்தாவிலிருந்தே மருந்து வரவழைத்துக் கொடுத்தார். பணமும் செலவழித்தார். இவர் இங்கு இல்லையானுல் யார் இவ்வளவு செய்திருப்பார்கள்?''

ந: ''நான் குருமகராஜின் கருவி மாத்திரமே. தம் கையிலுள்ள ஓர் ஆயுதம் போலவே அவர் என்னைச் செயல்படுத்துகிறுர்.''

ஸ்ரீ அன்னை: "(பணம்) உள்ளவர்கள் அளந்து தீர்க்க வேண்டும்.* இல்லாதவர்கள் ஜபித்துத் தீர்க்க வேண்டும்' என்று குருமகராஜ் சொல்வது வழக்கம்"

ந: "ஜபத்துக்கு வசதியாக முதலில் ஸ்நானம் செய்வது அவசியமா?"

ஸ்ரீ அன்னை: "ஆமாம். வீட்டிலிருந்தால் ஆஸனம், ஆசமனம் யாவும் செய்ய வேண்டும். ஆனால் பிரயாண காலத்தில் பகவந் நாமாவை மட்டும் ஜபித்தாலே போதும்."

ந: "நாமாவை மட்டும்தானா? மந்திரத்தை ஜபிக்க வேண்டாமா?"**

ஸ்ரீ அன்னை: "மந்திரத்தையும் ஜபிக்க வேண்டும் என்ற அர்த்தத்திலேயே சொன்னேன். ஒருமுகப்பட்டு, நிலைத்த உள்ளத்தோடு ஒரு முறை பகவந் நாமத்தைச் சொல்வது, (ஈடுபடாமல்) கோடிமுறை சொல்வதற்குச் சமமான சக்தி படைத்ததாகும். மனம் செல்லாதபோது கோடி ஜபித்தாலும் என்ன பயன்? பூர்ண இதயத்தோடு செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் நீ இறைவனின் அருளுக்குத் தகுதி பெறலாம்."

ந: "இரண்டு அல்லது மூன்று நாட்கள் இறைவனை அந்தரங்க சுத்தமாக வேண்டினாலே தரிசனம் அருள்கிறார் என்கிறார்கள். நான் எத்தனையோ நாட்களாக வேண்டி வருகிறேன். ஏன் இன்னம் தரிசனம் பெறவில்லை?"

ஸ்ரீ அன்னை: "பெறுவாயப்பா. பகவானை நீ தரிசிப்பாய். சிவபெருமானும் குருமகராஜும் சொன்ன வார்த்தை பொய்க்காது. குருமகராஜ் சுரேந்திரரிடம் சொன்னார்: 'உள்ளவர்கள் அளந்து தீருங்கள்; இல்லாதவர்கள் ஜபித்துத் தீருங்கள்' என்று. இதுவும் முடியாவிட்டால் அவனுக்கே உன்னை சரணாகதி செய்து கொள். நம்மைக் கவனித்துப் பேண எவனோ ஒருத்தன் இருக்கிறான் — தாயான, தந்தையான ஈச்வரன் இருக்கிறான் — என்பதை நீ நினைவில் கொண்டாலே போதும்."

* அதாவது பொருள் வசதியுள்ளவர்கள் தான தருமம் பழக வேண்டும்.

** நாமத்துடன் பீஜாக்ஷரமும் சேர்ந்தாலே மந்திரமாகிறது. ஸ்ரீ வித்யா போன்ற மந்திரங்கள் முற்றும் பீஜாக்ஷர மயமானவையே.



அருள்நெறிக் கதை:

# தேவியின் திருவருள்

**விவேகானந்ததாசன்**

ஒரு மலைச்சாரலில் தவவொழுக்கத்தில் சிறந்த துறவி ஒருவர் இருந்தார். அவர் வானத்தையே கூரையாகவும் புல் தரையையே படுக்கையாகவும் கொண்டு வாழ்ந்தார்.

ஒரு நாள் முனிவர் தியானம் செய்து கொண்டிருந்தார். அப்போது அவருடைய உள்ளத்தில் எப்போதும் இல்லாத ஒருவகை உணர்ச்சி தோன்றியது. காரணம் புரியாத முனிவர், கண்களைத் திறந்து பார்த்தார்.

அதேசமயத்தில், அவருடைய எதிரிலே செல்வத்தின் தேவதையாகிய திருமகள் தோன்றினாள். முனிவர், தேவியின் அடிமலரில் விழ்ந்து பணிந்தார்.

திருமகள், "குழந்தாய், விதை, தனக்கு உரிய பலனைத் தருகிறது. அதைப்போல, நன்மையைச் செய்தவர் நன்மையைப் பெறுவதும் தீமையைச் செய்தவர் தீமையைப் பெறுவதும் தெய்வ விதி ஆகும். நீ உன்னுடைய முற்பிறவிகளில் ஏராளமான புண்ணியச் செயல்களைச் செய்திருக்கிறாய். ஆதலால், நான் உன்னிடம் சில காலம் தங்கியிருக்க வேண்டும். எனது திருவருள் உனக்குள்ள வரையில் ஒரு ஆபத்தும் உனக்கு வராது. மக்களும் மன்னனும் உன்னைப் போற்றிப் புகழ்வார்கள். உனக்குத் திருவருள் புரிவதற்காகவே நான் வந்திருக்கிறேன்" என்று திருவாய் மலர்ந்தருளினாள்.

தேவியின் மொழிகள் துறவிக்குப் புன்முறுவலை உண்டுபண்ணின.

அவர், தேவியைப் பணிவோடு கைகூப்பித்

தொழுது சொன்னுர்: ''தாயே, மக்களும் மன்னனும் போற்றுவதோ தூற்றுவதோ, அல்லது பாராமுகமாக இருப்பதோ, எல்லாமே எனக்கு ஒன்றுதான். அரச மரியாதைகள் உலக மக்களுக்குப் பெரிதாக இருக்கலாம்; ஆனுல் உண்மையில் அவைகள் அற்பமானவைகள்; ஆண்டவனுக்கு இணை எதுவுமே இல்லை.

''தாயே, எனக்குப் பற்றின்மையும் கடவுளின் தியானமுமே உண்மையான செல்வங்கள். இணையற்ற அந்தச் செல்வங்களே எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தருகின்றன. வேறு செல்வங்கள் துறவியாகிய எனக்கு எதற்கு? 'திருமகளாகிய உன் திருவருள் கிடைக்காதா?' என்று இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள பலர் ஏங்கியபடி இருக்கிருர்கள். அவர்களுக்கு நீ திருவருள் பாலித்தால், அதனுல் அவர்கள் மிகுந்த பயனைப் பெறுவார்கள். குருடனுக்குக் கிடைக்கும் அழகிய சித்திரம் போல, துறவியாகிய எனக்கு அது அவசியம் இல்லையே! செல்வத்தின் மீது எனக்கு எந்த ஒரு பற்றுதலும் அறவே இல்லை என்பதும் உனக்குத் தெரிந்ததுதானே!''

தேவி அன்பு ததும்பச் சொன்னுள்: ''மகனே, உன் மனநிலையை நான் அறிவேன். ஆனுல் கர்ம விதிக்கு நானும் நீயும் கட்டுப்பட்டவர்களே ஆவோம். உன்னுடைய புண்ணியச் செயல்கள் தீரும் வரையிலும் சிறிது காலம் உன்னிடம் இருந்துவிட்டுப் போகிறேன். அதற்கு நீ தடை சொல்லாதே.''

துறவி, ''தாயே, உன் தெய்வீக லீலையை யார் தடுக்க முடியும்? உனது விருப்பப்படியே ஆகட்டும். ஆனுல் ஒரு வேண்டுகோள். உன்னுடைய திருவருள் என்னை விட்டு விலகுவதை முன்னதாக நீ எனக்குத் தெரிவித்தால் நல்லது'' என்று கேட்டுக் கொண்டார்.

திருமகள், முனிவரின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டாள். அந்த விநாடி முதல் தன்னுடைய கடாட்சம் அவர் மீது பொழியப்படுவதாகவும் சொல்லி மறைந்தாள்.

முனிவர் 'புண்ணியச் செயல்களும் பந்தப்படுத்தும் ஒருவகைப் பொன்விலங்கே ஆகும். திருமகள் கடாட்சம் தன்னை விட்டு நீங்கினுல், அதன்மூலம் எஞ்சியிருக்கும் கடைசி விலங்கும் தகர்ந்து போய்விடும்' என்று நினைத்துக் கொண்டார்.

துறவி வழக்கப்படி மலைச்சாரலுக்குச் சற்று தூரத்தில் இருந்த ஆற்றிலே சென்று நீராடினுர்.



நீராடி முடிந்ததும் கரையேறி வந்தார். அப்போது அவர் கண் முன்னுல் பூமி வெடித்து ஒரு பிளவு ஏற்பட்டது. அதிலிருந்து தங்க நாணயங்கள் நிறைந்த ஒரு பெரிய குவியல் மேலே வந்தது.

அதைப் பார்த்த முனிவர் தேவியின் லீலையை நினைத்துத் தனக்குத் தானே சிரித்துக் கொண்டார். தங்க நாணயங்கள் அவருடைய உள்ளத்தில் எந்தவித சலனத்தையும் உண்டு பண்ணவில்லை. அதைத் தொடவும் செய்யாமல் துறவி, மலைச்சாரலிலிருந்த தம் இருப்பிடம் திரும்பினுர்.

துறவி வாழ்ந்து வந்த மலைச்சாரலுக்குப் பக்கத்திலேயே, இராஜசேகரம் என்னும் ஒரு பெரிய நகரம் இருந்தது. அந்த நகரத்தைத் தலைநகராகக் கொண்டு பராந்தகன் என்னும் மன்னன் ஆட்சி செய்து வந்தான்.

'மக்களும் மன்னனும் உன்னைப் போற்றுவார்கள்' என்று திருமகள் சொன்னது துறவியின் ஞாபகத்துக்கு வந்தது. 'தேவியின் வாக்கு எப்படிப் பலிக்கிறது என்பதைச் சோதித்துப் பார்க்கலாமே'—என்ற எண்ணம் அவருடைய குழந்தை உள்ளத்தில் விளையாட்டாக எழுந்தது.

ஆதலால், துறவி மலைச்சாரலைவிட்டுக் கிளம்பினுர். பராந்தக மன்னனின் அரண்மனையை அடைந்தார்.

அப்போது மன்னன் அரியணையிலே வீற்றிருந்தான். அந்த மணிமண்டபத்தில் அமைச்சரும், படைத் தளபதிகளும் மக்களும் குழுமி இருந்தார்கள். அரசர் ராஜ்ஜிய பரிபாலன விவகாரங்களை அரசவையினரோடு கலந்து ஆலோசித்துக் கொண்டிருந்தார்.

அந்தத் தருணத்தில் நமது துறவி வெகு வேகமாக அரசவையில் நுழைந்தார். அனைவரும் அவருக்கு மரியாதை காட்டும் வகையிலே எழுந்து நின்றார்கள். அரசர், கூப்பிய கைகளோடு துறவியை வரவேற்பதற்காகத் தாமே அரியணையில் இருந்தும் எழுந்து வந்தார். அனைவருடைய பார்வையும் துறவியின் மீதே பதிந்திருந்தன.

பராந்தக மன்னன் நல்வரவு கூறி துறவியின் திருவடிகளில் முழங்காலிட்டுப் பணிந்தான்.

'எனது திருவருள் உள்ள வரையிலும் ஒரு ஆபத்தும் உனக்கு வராது' என்ற தேவியின் வாக்கைப் பரிசோதிக்க நினைத்த துறவி, முழங்காலிட்டுப் பணிந்த மன்னனின் தலையைக் காலால் ஓங்கி உதைத்தார்! மன்னன் தலையில் இருந்த தங்கக்கிரீடம் சற்றுத் தொலைவிலே போய் விழுந்தது!

அவ்வளவுதான்! துறவியின் செய்கை அரசவையில் மிகுந்த பரபரப்பை உண்டுபண்ணியது. வீரர்கள், துறவியைக் கொல்வதற்காகத் தங்கள் வாள்களை விரைந்து உருவினார்கள். 'அடாத காரியத்தைச் செய்த துறவியின் தலையை, அரசன் இல்லாமல் செய்துவிடப் போகிறான்' என்று அனைவருமே நினைத்தார்கள். சில வினாடிகளில் அரசவை முழுவதும் கிடுகிடுத்து விட்டது!

மன்னன், துறவியின் செய்கைக்கான காரணம் புரியாமல் விழித்தான்.

துறவி, தனது காலை அரசன் வெட்டி எறியும்படி கட்டளை பிறப்பிக்கப் போகிறான் என்று நினைத்தார்.

திருமகள், துறவியின் எண்ணத்தையும் செயலையும் கண்டாள். அவருக்கு ஆபத்தோ, அவமரியாதையோ வந்துவிடக்கூடாதே என்பதற்காக ஒரு அற்புதம் நிகழ்த்தினாள்.

அதன் விளைவாக, மறுகணமே தூரத்தில் விழுந்திருந்த அரசனின் தங்கக்கிரீடத்திலிருந்து ஒரு நல்ல பாம்பு சீறியபடி வெளியே வந்து படம் எடுத்து ஆடியது!

நல்ல பாம்பைக் கண்ட அரசனும் மற்றவர்களும், ''அரசனின் கிரீடத்தில் எப்படியோ இந்தப் பாம்பு புகுந்திருக்கிறது. இதைக் கவனிக்காமல் அரசர் பெருமான் வழக்கப்படி தலையிலே எடுத்து அணிந்திருக்கிறார். காட்டிலே வாழும் இந்தத் துறவி முக்காலத்தையும் உணர்ந்த ஒரு மாபெரும் முனிவர். அவர், அரவம் தீண்டி அரசன் மரணமடைவதைத் தவிர்ப்பதற்காகவே தாமாக அரசனைத் தேடி வந்திருக்கிறார்'' என்று நினைத்தார்கள்.

அவையோருக்குத் துறவியின் மேல் தோன்றிய கோபம் பறந்தது. நன்றி உணர்ச்சி பொங்கியது. எல்லோரும், தமது அரசனின் உயிரைக் காத்த கருணை உள்ளம் கொண்டவர் என்று துறவியைப் போற்றினார்கள். அவரைக் கைகூப்பித் தொழுதார்கள். வீழ்ந்து பணிந்தார்கள்.

அரசனால் நன்றிப் பெருக்கால் பேசவும் முடியவில்லை. அவன் துறவியின் திருவடிகளில் மீண்டும் மீண்டும் வீழ்ந்து வணங்கினான்: ''பெருமானே, நல்லவேளையாக தெய்வம் போல இங்கே எழுந்தருளினீர்கள். தேவரீரின் கருணையால் மரணத்தில் இருந்து நான் காப்பாற்றப்பட்டேன்'' என்று நன்றிப் பெருக்குடன் நா தழுதழுக்கக் கண்ணீர் மல்கக் கூறினான்.

அரசமாதேவியும் அரசவைப் பிரதானிகளும் மக்களும், துறவியின் திருவடிகளில் வீழ்ந்து பணிந்தார்கள். மன்னனின் உயிரைக் காத்தருளிய மாமுனிவர் என்று நாடு முழுவதும் துறவியை நன்றியுடன் பாராட்டித் தலை வணங்கியது.

'அரசனை உதைத்த தனக்கு உண்மையில் தண்டனைதான் கிடைத்திருக்க வேண்டும். ஆனால், தேவி திருவருள் புரிந்து கொண்டிருப்பதால், தண்டனைக்குப் பதிலாக இப்போது பாராட்டுதல் கிடைத்துக் கொண்டிருக்கிறது' என்பதைத் துறவி உணர்ந்து கொண்டார்.

அரசன் தனது நன்றியறிதலைத் தெரிவிக்கும் வகையில், துறவியைப் பட்டத்து யானை மீது ஏற்றி சாமரம் வீசமேளதாளங்களுடன் ஊர்வலம் நடத்தி கௌரவித்தான். துறவி, ஊர்

வலம் நடந்து கொண்டிருந்தபோது தேவியின் திருவருளால் விளையும் லீலைகளை நினைத்து வியந்து கொண்டிருந்தார்.

ஊர்வலம் விமரிசையாக நடந்து முடிந்தது. துறவி, மலைச்சாரலுக்கு மீண்டும் திரும்பிப் போகவேண்டும் என்று சொன்னார். மன்னனுக்கு அவரை அனுப்ப விருப்பமில்லை. அரசன், துறவியை அரண்மனையிலேயே தங்கி அருள் பாலித்தருளும்படி அன்புடன் கைகூப்பி வேண்டினான். 'தேவியின் லீலை, எவ்வளவு தூரம் தான் போகிறது என்பதைப் பார்க்கலாம்' என்ற எண்ணத்துடன் துறவியும் அரசனின் கோரிக்கைக்குச் சம்மதித்தார்.

அரண்மனையை அடுத்து இருந்த பெரிய மாளிகையில், எல்லா வசதிகளுடன் துறவி தங்குவதற்கு அரசனே முன்நின்று ஏற்பாடுகளைச் செய்தான்.

இரவு வந்தது. அரசன் அந்த மாளிகையில், தங்கக் கட்டிலில் புத்தம் புதிய வெல்வெட்டு மெத்தையைப் பரப்பி, துறவியை அதில் எழுந்தருள வேண்டினான். மரத்தடியில் இருந்து வந்த தன்னை, கோபுர மாளிகையில் கொலுவீற்றிருக்கச் செய்த தேவியின் அற்புத அருள் திறத்தை எண்ணி துறவி வியப்பில் மூழ்கினார். வெல்வட்டு விரித்த கட்டிலில் துறவி உட்கார்ந்திருந்தார். அரசமாதேவியும் இளவரசியும் துறவிக்குப் பாலும் பழங்களையும் தந்து ராஜோபசாரங்கள் செய்தார்கள். மலைச்சாரலில் காயும் கனியும் உலர்ந்த சருகுகளையும் உணவாக உட்கொண்டு வாழ்ந்த துறவிக்கு, அரசனே சாமரம் வீசியவனாகப் பணிவுடன் நின்றான்!

மாடமாளிகைகளிலும் கூடகோபுரங்களிலும் ராஜோபசாரங்களுடன் சஞ்சரித்த துறவி, சில நாட்களுக்குப் பிறகு மீண்டும் மலைச்சாரலுக்குப் போக விரும்புவதாகச் சொன்னார். அதற்கு, அரசனும் அரசமாதேவியும் மந்திரி பிரதானிகளும் சம்மதிக்கவில்லை. துறவி தங்களுடனேயே இருக்க வேண்டும் என்று மீண்டும் மீண்டும் அவரைக் கைகூப்பித் தொழுது பிரார்த்தித்தார்கள்.

துறவி, தேவியின் திருவருளை மேலும் சோதிக்க நினைத்து அரண்மனையில் தங்க சம்மதித்தார்.

அன்றிரவு, அரசனும் அரசியும் தமக்குரிய அந்தரங்க அறையில் படுத்து ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். அங்கே யாருமே போகக் கூடாது. போனால் கடுமையான தண்டனைதான் கிடைக்கும். இது துறவிக்கும் தெரியும்.

ஆனால், தேவியின் திருவருள் இருந்தால் ஆபத்து வராது என்பதைச் சோதிக்க நினைத்த துறவி, திடீரென்று நடு இரவில் அரசனின் அந்தரங்க அறைக்குள் நுழைந்தார். உறங்கிக் கொண்டிருந்த அரசனையும் அரசியையும் பளீர் பளீர் என்று ஓங்கி அறைந்தார்! அரசனும் அரசியும் திடுக்கிட்டு கண் விழித்தார்கள். எதிரிலே நின்ற துறவியையும் அவருடைய செயலையும் கண்டு காரணம் புரியாமல் குழம்பினார்கள். துறவி அதோடு நிற்காமல், அவர்களுடைய இரண்டு கைகளையும் கெட்டியாகப் பற்றிக் கொண்டு மிருகங்களை இழுத்துக்கொண்டு வருவதைப் போல, பரபர என்று பைத்தியக் காரனைப் போல அந்த மாளிகையை விட்டு வெளியே வந்தார். ஒரு பெண்ணை, மாற்றான் மனைவியை, அதுவும் அரசன்மாதேவியைத் தொடுபவனைத் தூக்கில் அல்லவா போட வேண்டும்?

அரசனும் அரசியும் துறவியின் எதிர்பாராத செய்கையால் குழம்பிக் கொண்டிருந்த சமயத்தில், துறவி, அவர்கள் இருவரையும் மாளிகைக்கு வெளியே இழுத்துக்கொண்டு வந்து விட்டார்.

துறவியின் செய்கைக்கான காரணத்தை திருமகள் உணர்ந்தாள். அவரை எப்படியாவது ஆபத்தில் இருந்து காப்பாற்ற முடிவு செய்தாள். தேவியின் திருவருளால், அரசனையும் அரசியையும் துறவி மாளிகைக்கு வெளியே இழுத்துக்கொண்டு வந்த அதே சமயத்தில், அரசன் படுத்து உறங்கிக் கொண்டிருந்த கட்டிடம் மளமள என்று சரிந்து இடிந்து விழுந்தது!

கட்டிடம் இடிந்து விழுந்ததை அரசனும் அரசியும் கண்முன்னால் கண்டார்கள். அவர்கள், ''கட்டிடம் இடிந்து விழப் போவதைத் துறவி தமது தவவலிமையால் முன்னதாக உணர்ந்திருக்கிறார். தங்களின் உயிரைக் காப்பாற்றும் நோக்கத்தில்தான் அவர் அவ்விதம் நடந்து கொண்டிருக்கிறார்'' என்று நினைத்தார்கள். அவர்களுக்குத் துறவியின் மேலிருந்த மதிப்பு பல ஆயிரம் மடங்கு கூடிவிட்டது! துறவியின்

கால்களில் நன்றியுடன் கண்ணீர் மல்க அரசனும் அரசியும் விழ்ந்து பணிந்தார்கள்.

தனக்குத் தூக்குத் தண்டனை விதிக்க வேண்டிய அரசனை, அடிபணியும்படி அல்லவா தேவி செய்திருக்கிருள் என்று நினைத்த முனிவர், தேவியின் திருவருளின் திறத்தை நினைத்து ஆச்சரியத்தில் அமிழ்ந்து போனுர்.

இரண்டு முறை மன்னன் உயிரைக் காத்த முனிவர் என்று, நாடே துறவியை வாழ்த்திக் கொண்டிருந்தது.

ஒரு நாள் மாலை நேரம். துறவி அரண்மனையைச் சேர்ந்த நந்தவனத்திலே உலாவிக் கொண்டிருந்தார். அப்போது அவரது பார்வையில் மாமரத்திலே தொங்கிய நல்ல ஒரு மாங்கனி தட்டுப்பட்டது. துறவி அதைப் பறித்துத் தமது கைகளில் வைத்துக் கொண்டார். சிறிது நேரத்துக்குப் பிறகு அவரைக் காண்பதற்காகப் பராந்தக மன்னன் அங்கே வந்தான். துறவி மாங்கனியை அரசனுக்குக் கொடுத்தார். மன்னன் மாங்கனியைப் பெற்று மகிழ்ச்சியோடு அரண்மனை திரும்பினுன். அதைக் காலையில் சாப்பிடும் எண்ணத்துடன் தன்னுடைய அறையில் பத்திரமான ஓர் இடத்திலே வைத்தான்.

அன்றைய இரவு, துறவி அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தார். அப்போது உறக்கத்திலே ஒரு கனவு. அந்தக் கனவிலே திருமகள் தோன்றினுள்: ''நான் உன்னை விட்டுப் பிரிந்து போகப் போகிறேன். இந்த விளுடி முதல் என்னுடைய திருவருள் உனக்குத் துணையாக அமையாது'' என்று சொல்லிக்கொண்டே மறைந்து விட்டாள். தேவியின் அறிவிப்பைக் கேட்ட முனிவர், கனவு கலைந்து விழித்துக் கொண்டார். காலையில் அரசனிடம் விடைப் பெற்றுக்கொண்டு மலைச்சாரலுக்குத் திரும்பத் தீர்மானித்தார்.

கிழக்கு வெளுத்துப் பொழுதும் புலர்ந்தது. அரசன், ஆவலோடு துறவி கொடுத்த மாங்கனியைப் பிரசாதமாகக் கருதி வாயில் வைத்துக் கடித்தான். மறு விளுடியே அவனது தலை சுழன்றது. தள்ளாடியபடியே மயக்கமுற்று சாய்ந்துவிட்டான். அரசன்மாதேவி பதறினுள். அரண்மனை வீரர்கள் மருத்துவரை அழைத்து வர விரைந்தார்கள். மருத்துவர்கள் குழுமி, தக்க மருந்து வகைகளைக் கொடுத்து அரசனைக் குணப்படுத்தினுர்கள். அரசன் சாப்பிட நினைத்த மாங்கனியைப் பரிசோதித்து, அதிலே விஷம் வைக்கப்பட்டிருந்தது—என்று தெரிவித்தார்கள்.

பராந்தகன், தன்னுடைய அமைச்சர்களுடன் கலந்து ஆலோசித்தான். அனைவரும் ஒருமனதாக ஒரே முடிவுக்கு வந்தார்கள். ''துறவிக்கு வஞ்சக எண்ணம் முளைத்து விட்டது. அதனுல்தான் நாடாளும் ஆசைபிடித்து, என்னைக் கொன்றுவிடுவதன் மூலம் நாட்டைக் கைப்பற்ற திட்டம் தீட்டி இருக்கிருர். ஆனுல் அவர் என்னை இரண்டு முறை மரணத்தில் இருந்து காப்பாற்றினுர் என்பது உண்மை. அந்த நன்றியுணர்ச்சி காரணமாக அவரை நான் கொல்ல விரும்பவில்லை. ஆனுல் அதே சமயத்தில், அவரை இனிமேலும் அரண்மனையில் வைத்திருப்பது புத்திசாலித்தனம் ஆகாது. உடனே துறவியை அரண்மனையில் இருந்து வெளியேற்றி மலைச்சாரலுக்குக் கொண்டுபோய் விட்டு வாருங்கள்'' என்று மன்னன் ஆணை பிறப்பித்தான்.

அரசனிடம் விடை பெற்றுப் போகக் காத்திருந்த துறவியை, வீரர்களுடன் அமைச்சர் அணுகினுர். நகருக்கு வெளியே இருந்த மலைச்சாரலுக்குத் துறவியை அழைத்துப் போனுர்கள்.

அமைச்சர் சொன்னுர்: ''ஏ துறவியே! எங்கள் மன்னர் நல்லவர். ஆகவேதான், மாங்கனியில் நஞ்சூட்டி அரசைக் கைப்பற்றும் உமது சூழ்ச்சி தெரிந்தும் உம்மைக் கொல்லாமல் மலைச்சாரலில் கொண்டுபோய்விடும்படி கட்டளையிட்டார். இனி மறந்தும் நீங்கள் தலைநகருக்குள் கால் வைத்தால், உமது தலை பறிபோய்விடும், ஜாக்கிரதை!'' என்று சொல்லி விட்டுச் சென்றுர்.

துறவி, தேவியின் லீலையை ரசித்தார். அவருக்கு எல்லாமே விளையாட்டாக இருந்தது. தனக்குத்தானே அவர் !சொல்லிக்கொண்டார். ''தேவி, உன்னுடைய திருவருள் இருந்த காரணத்தால், ஆண்டியாகிய நான் அரண்மனையிலே கொண்டாடப்பட்டேன். தீமைகளையும் நன்மையாக மாற்றி நீ அருளாடல் புரிந்தாய். உனது லீலையே லீலையம்மா! உன்னுடைய திருவருள் விலகிய உடனே, அரண்மனையில் இருந்தும் நான் வெளியேற்றப்படும் நிலை வந்தது. போற்றிப் புகழ்ந்த மன்னனும் மக்களும் தூற்ற ஆரம்பித்துவிட்டார்கள்.''

துறவி எல்லாவற்றையும் மறந்து, பழைய படியே தமது தவ வாழ்க்கையைத் தொடர ஆரம்பித்தார்.

ஆண்டவனின் அருள் திறத்தை மேலே நாம் பார்த்த இந்தக் கதை விளக்குகிறது.

ஒருவனுக்குக் கடவுளின் துணை ஒன்றே ஒன்று மட்டும் இருந்தால், வேறு எந்தத் துணையுமே இல்லாவிட்டாலும் நன்மையே வருகிறது. தெய்வம் உண்டு என்று நம்பியும் அவரையே சார்ந்தும் வாழ்பவர்கள் பாக்கிய வான்கள். 'கடவுளை நம்பினோர் கைவிடப் படார்'

தெய்வத்தின் துணை இல்லாவிட்டால், உலகில் எவ்வளவுதான் இலௌகிகத் துணை களைப் பெற்றிருந்தாலும் தோல்வியே ஏற் படும். கிருஷ்ண பரமாத்வாகிய தெய்வத்தின் துணையிருந்ததால், பாண்டவர்கள் எவ் வளவோ துன்பங்களையும் கடந்து வந்து வெற்றி பெற்றார்கள். தெய்வத்தின் துணை இல்லாததால், எவ்வளவோ இலௌகிக வலி மையைப் பெற்றிருந்தும் கூட துரியோதனன் தோல்வியையே அடைந்தான். 'நம்பியவருக்கு நடராஜா; நம்பாதவருக்கு எமராஜா'

கடவுள் துணை இருந்தால் கூற்றுவனும் ஓடி ஒளிவான். அவரது திருவருள் இல்லாவிட்டால் அற்பர்களுக்கும் கூட நாம் அஞ்சி அலற வேண்டி யிருக்கும். கண்ணனின் துணையால் மகத்தான வெற்றிகளைக் கண்ட அர்ஜுனன், கண்ணனின் மறைவுக்குப் பிறகு அவரது திருவருள் இல் லாத காரணத்தால் படுதோல்வியை அடைந்த தாக மகாபாரதம் கூறுகிறது.



# பரமாத்மன்

## (ஸ்ரீ ராமபிரானின் அருளுரை)

உன்னுடைய நிஜ சொரூபமான ஆத்மா எந்தவிதமான குணமும் இல்லாதது, பற்றும் இல்லாதது என்பதை நீ உண்மையில் அறிந்து கொள்ளும்போது — நீ தேக புத்தியை விட் டொழித்துவிடுவாய். உடல் ஜடப்பொருள். அநித்தியப் பொருள். ஆகவே ஆத்மாவின் உண்மை சொரூபத்தைத் தேடு.

* * *

இடைவிடாமல் ஆத்ம சிந்தனை செய்தால், உன்னுடைய மனம் தூய்மை அடையும். உன் னுடைய அவித்தை வேரறும். பழைய சம்ஸ் காரங்களும் போய்விடும். தினந்தோறும் மருந்து உட்கொண்டால், உன்னுடைய நோய்கள் முற்றிலும் அகன்று விடுவதைப் போலவேதான் இதுவும். மனம் மாசு இல்லா மல் தூய்மை அடைந்தால், துன்பமே கலவாத பூர்ணானந்தம் உனக்கு வாய்க்கும்.

* * *

எப்படி இடைவிடாமல் ஆத்ம சிந்தனை செய் வது என்று கூறுகிறேன். வேதம் உபதேசிப்பது இதைத்தான்: தனிமையில் உள்ள ஓர் இடத் துக்குச் சென்று புலன்களை அடக்கு; தீய எண்



ணம் எதற்கும் இடம் கொடுத்து விடாமல், ஆத்மாவைப் பற்றியே ஆழ்ந்து சிந்தனை செய். இவ்விதம் சிந்தித்து, எங்கும் வியாபித்துள்ள

ஆத்மாவில் உலகத்தை நீ மூழ்கும்படி செய்ய வேண்டும். இவ்விதம் செய்வதால் மட்டுமே நீ பரமானந்தத்ததைப் பெறுவாய்.

* * *

'நான் பரப்பிரம்மம். எனக்குப் பற்றுகள் இல்லை. நான் சர்வக்ஞன், நான் பரிசுத்தன்' — என்று நீ நினைப்பாயாக. இந்த முறையில் சதாசர்வ காலமும் உணர்ந்தபடியே இருப்பா யாக. பரமாத்மாவுடன் ஐக்கிய பாவனையை உறுதிப்படுத்திக்கொள். உனக்குள்ளேயே ஆனந்தத்தைச் சுவைத்திடு. உனக்குப் புறம் பாக என்ன இருக்கிறது என்பதைப் பற்றி தெரிந்துகொள்வதற்கு நீ ஆவல் கொள்ளாதே. இப்படி எல்லாம் நீ செய்தாயானால் கொந் தளிக்கும் அலைகளே இல்லாத கடல் போல, சாந்தமாகவும் சுதந்திரமாகவும் இருப்பாய்.

* * *

தன்னுடைய பொழுதை எல்லாம் ஆத்மாவை மட்டுமே சிந்திப்பதில் கழித்து வருகிற யோகி, தன்னுடைய பிராரப்தங்கள் ஒய்ந்துபோகும் வரையிலும் உயிர் வாழ்வான். அதன் பிறகு அவன் பரமாத்மாவாகிய என்னிடம் லயமாகிவிடுவான்.

* * *

என் பிரியமுள்ள லட்சுமணு, பரம ரகசிய மான தத்துவத்தை நான் உனக்கு வெளியிடப் போகிறேன். பரமாத்மாதான் அந்தப் பரம ரகசியம். பரமாத்மாவை அறிவதால் மாய உலகம் உடனே மறைந்தொழிகிறது. முதலில் நான் உனக்கு மாயையை வர்ணித்துக் கூறு கிறேன். பிறகு ஞானத்தைப் பெறும் வழியை விரிவாக விளக்கிக் கூறுகிறேன். அதன் பிறகு விஞ்ஞானத்தைப் பற்றி உனக்குச் சொல் கிறேன். அதற்குப் பிறகு பரமாத்மாவைப் பற்றிக் கூறுகிறேன். பரமாத்மாவை அறிந்து கொண்டவன் எதற்குமே அஞ்ச வேண்டிய தில்லை.

* * *



சிறுவர் பகுதி :

# தீயோர் குணம்

**அ. லெ. நடராஜன்**

ஒருநாள் ஒரு மனிதன் ஒரு காட்டுப் பாதை வழியாக நடந்து போய்க் கொண்டிருந்தான். அப்போது ஒரு பாறையின் கீழ் அகப்பட்டுக்கொண்டு யாரோ பெருமூச்சு விடுவது அந்த மனிதன் காதில் விழுந்தது.

அருகில் சென்று பார்த்தான். பெரும் மலைப்பாம்பு ஒன்று கல்லின் கீழ் அகப்பட்டுக்கொண்டு தவிப்பதை அந்த மனிதன் கண்டான்.

உடனே பாம்பு அந்த மனிதனைப் பார்த்து, ''ஐயா! என் மீது இரக்கம் கொண்டு இந்தக் கல்லைச் சிறிது அப்பால் அகற்றுங்கள். உங்களுக்குப் புண்ணிய முண்டு'' என்று நயந்து வேண்டியது.

அதற்கு அந்த மனிதன், ''ஏ பாம்பே! தீயவர்களுக்கு உதவி செய்தால் அதனுல் தீமைதான் அதிகரிக்கும் என்று என் ஆசான் எனக்குப் போதித்து இருக் கிருர். ஆகையால் நான் உனக்கு உதவமாட்டேன்'' என்று பதில் சொன்னுன்.

''ஐயா! அப்படிச் சொல்லாதீர்கள்; தீயவர்கள் எப்பொழுதும் தீயவர்க ளாக இருப்பது இல்லை. மனம் திருந்தி நல்லவர்களாக ஆவதும் உண்டு. ஆகவே, தாங்கள் உதவி செய்து என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று காரண காரியங்களைச் சொல்லி உதவி செய்யும்படி பாம்பு வேண்டியது.

பாறையை அப்பால் புரட்டி, பாம்பைக் காப்பாற்றினுன் அந்த மனிதன்.

தனக்கு இனி ஆபத்து இல்லை என்பது நிச்சயமானதும், பாம்பின் இயல்பான தீய தன்மை அதனிடம் தலைதூக்கலாயிற்று. ''ஏ மனிதா! அப்பால் நகராதே. உன்னை நான் விழுங்கப் போகிறேன்'' என்று சொல்லியது.

மனிதன் அதிர்ச்சி அடைந்து போனான். ''உதவி செய்து உயிரைக் காப்பாற்றியதற்கு நீ செய்யும் பதில் உபகாரமா இது?'' என்று கேட்டான் மனிதன்.

''தீயவர்களின் தீய குணம் தீமை செய்வதுதான், ஆகையால் நான் உன்னை விழுங்காமல் விடப்போவதில்லை'' என்று பதிலுக்குக் காத்திராமல், அந்த மனிதனை விழுங்க ஓடியது பாம்பு.

மனிதன் அலறிப்புடைத்துக்கொண்டு ஓடினான். வழியில் ஒரு முயலைச் சந்தித்தான். ''முயலே! முயலே! இந்தப் பாம்பு செய்யும் அக்கிரமத்தைப் பார். என்னை விழுங்க வருகிறது'' என்று சொன்னான்.

''பாம்பின் குணம் பிறரை விழுங்குவதுதான். இயற்கைக் குணத்தைப் போக்க யாராலும் முடியாது'' என்று முயல் பதில் சொல்லியது.

மனிதன் மேலும் ஓடினான்; பாம்பும் விரட்டிக்கொண்டு போயிற்று.

வழியில் கழுதைப்புலி ஒன்றை மனிதன் சந்தித்தான். ''ஏ கழுதைப் புலியே! நான் செய்த உதவியை மறந்து, இந்த மலைப்பாம்பு என்னை விழுங்க வருகிறது, இது நியாயமா? நீயே சொல்'' என்று முறையிட்டுக் கொண்டான்.

அதற்குக் கழுதைப்புலி, ''தீயவர்களுக்கு நியாயம் எது, அநியாயம் எது என்பது விளங்காது. பிறர் எடுத்துச் சொன்னாலும் புரியாது'' என்று கூறியது.

மனிதன் மேலும் சென்றான். வழியில் குள்ளநரி ஒன்றைக் கண்டான். ''நரியே! நரியே! இந்தப் பாம்பிடமிருந்து என்னைக் காப்பாற்று. உதவி செய்த என்னைக் கடிக்க வருகிறது'' என்று வேண்டினான்.

''என்ன உதவி செய்தாய்?'' என்று குள்ளநரி கேட்டது.

''பாறையில் அகப்பட்டுத் தவித்த பாம்பை நான் காப்பாற்றினேன்'' என்றான் மனிதன்.

''இது உண்மைதானா?'' என்று குள்ளநரி பாம்பிடம் வினவியது.

''ஆம்'' என்று பாம்பு ஒப்புக்கொண்டது.

பாம்பு சொன்ன பதிலைக் கேட்டதும் சிறிது நேரம் யோசனை செய்தது குள்ளநரி. பிறகு இரண்டையும் நோக்கி, ''நீங்கள் இருவரும் வாருங்கள். பாம்பு ஆபத்தில் சிக்கி இருந்ததையும், பாறையை மனிதன் புரட்டி, எப்படிக் காப்பாற்றினான் என்பதையும் காட்டுங்கள்'' என்று கூறியது.

மூவரும் புறப்பட்டுப் போனார்கள். முன்பு பாறையின் கீழ், தான் அகப்பட்டுக்கொண்ட இடத்தில் பாம்பு படுத்துக்கொண்டது. மனிதன் முன்பு இருந்தது போல் பாறையை அதன் மீது வைத்தான்.

உடனே குள்ளநரி, மனிதனை நோக்கி, ''தீய பாம்பு அங்கேயே கிடந்து தவிக்கட்டும். தீயவர்களுக்கு உதவி செய்து, இனி ஆபத்தில் சிக்கிக்கொள்ளாதே'' என்று புத்திமதி சொல்லி அப்பால் போய்விட்டது.

மனிதனும் தப்பிப் பிழைத்து, ஊர் திரும்பினான்.

தீய குணமுள்ளவர்களைத் திருத்துவது எளிதில் இயலாது.





# ஸ்ரீ கிருஷ்ணர் போதித்த கர்ம யோகம்

சுவாமி விவேகானந்தர்

அக்னியில் ஆஹுதியைச் செய்யும் யக்ஞத்திற்குப் பதிலாக இந்த ஒரே மகா யக்ஞத்தை இரவு பகலாகச் செய்து வாருங்கள் — உங்களுடைய சிறிய அகந்தையை வெற்றி கொள்வதாகிய வேள்வியைச் செய்யுங்கள். ''இந்த உலகிலே செல்வத்தைத் தேடித் தேடி நான் கண்ட ஒரே செல்வம் பகவானுகிய நீங்கள் தான். பெருமானே! என்னையே நான் உங்களுக்கு அர்ப்பணித்துக் கொள்கிறேன்.''

இரவு பகலாக இதை நாம் ஜெபித்து வருவோமாக. ''ஆண்டவனே, எனக்கு எதுவுமே வேண்டாம். நல்லதாக இருந்தாலும் கெட்டதாக இருந்தாலும், நல்லது கெட்டது இரண்டும் இல்லாததாக இருந்தாலும், அதை நான் பொருட்படுத்தவில்லை. அதில் எனக்கு ஆர்வமே இல்லை. எல்லாவற்றையும் நான் தங்களுடைய திருவடிகளிலேயே சமர்ப்பித்து விடுகிறேன்'' என்று சொல்வோமாக.

போலித் தோற்றமாகிய நம்முடைய இந்த அகத்தை, இரவு பகலாக நாம் துறந்துவிட முயற்சி செய்வோமாக. அவ்விதம் செய்து, அது நம்மைவிட்டுப் பிரியாத ஒரு பழக்கமாகவே ஆகிவிடட்டும். அது நம்முடைய இரத்தத்திலேயே கலந்துவிடட்டும். நரம்புகளிலே புகுந்து விடட்டும். மூளையிலே ஊடுருவி நிற்கட்டும். உடல் முழுவதும் ஒவ்வொரு விநாடியும் ஆத்மத்தியாகம் என்ற இந்த ஒரே கருத்துக்கு இணங்கி ஒழுகட்டும். அத்தகைய ஒரு பழக்கம் நம்மிடம் ஊறிவிடும் வரையிலும் இந்த முயற்சியை விடாமல் செய்து வருவோமாக. அந்தப் பழக்கம் ஏற்பட்டு உறுதியான பிறகு, போர்க்களத்தினுள் செல்வோம்! பீரங்கி அதிரட்டும். போரின் பேரிரைச்சல் ஒலிக்கட்டும். ஆனால் போர்களத்திலும் நாம் எதனாலும் பாதிக்கப் படாமல் சாந்தமாகவே இருப்பதைக் காண் போம்.

நான் கர்மம் செய்ய விரும்புகிறேன். ஒரு மனிதனுக்கு நன்மை செய்ய விரும்புகிறேன். ஆனால், இவ்விதம் எனது உதவியைப் பெறும் அந்த மனிதன் நன்றிகெட்டவனாகவே என்னிடம் நடந்து கொள்வான் என்பது என்னவோ நிச்சயம். அவன் எனக்கு விரோதமாகவே செயல்படுவான் என்பது நிச்சயம். ஆதலால் நான் பெறப்போவது துன்பமே ஆகும். இதுவே உலகத்தின் போக்கு! இதன் காரணமாக மக்களில் பலர் நல்ல செயல்களைச் செய்வதிலிருந்தும் தடுக்கப்படுகிறார்கள். மேலும் மனித குலத்தினுடைய கர்மத்தில் பெரும் பகுதியும், ஆற்றலில் பெரும் பகுதியும் இதனால் பாழாக்கப்படுகின்றன. 'வேதனைப்படுவோம், துன்பப் படுவோம்' என்ற அச்சமே மக்கள் ஆர்வத்துடன் செயலில் ஈடுபடுவதற்குக் குறுக்கே நிற்கிறது.

கர்மத்திற்காகவே கர்மம் செய்வது எப்படி என்பதைக் கர்மயோகம் நமக்குப்

போதிக்கிறது. பற்றில்லாமல் கர்மம் செய்வது எப்படி, அதனால் யார் எதற்காக உதவப்படு கிறார்கள் என்பதைப் பற்றிய சிந்தனையே இல் லாமல் கர்மம் செய்வது எப்படி என்பதை எல்லாம் கர்மயோகம் போதிக்கிறது.

கர்மயோகி உழைப்பதற்குக் காரணம், அது அவனுடைய இயல்பு என்பதால்தான். உழைப் பது தனக்கு நன்மை தரும் என்பதை அவன் ஆழ்ந்து உணர்வதால்தான். அதையும் கடந்த தாக எந்த ஒரு நோக்கமும் அவனுக்குக் கிடை யவே கிடையாது. இந்த உலகிலே அவனு டைய நிலை, கொடுப்பவனுடைய நிலை. எதை யும் பெற்றுக்கொள்ளும் மனநிலையே அவ னுக்கு எழுவதில்லை. தான் கொடுப்பதை மட் டுமே அவன் அறிவான், ஆனால் அதற்குப் பிரதிபலனாக அவன் எதையும் வேண்டிக் கேட் பதில்லை. அதனால் அவன் துன்பத்தின் பிடியில் சிக்குவதிலிருந்து தப்புகிறான்.

மனித இயல்பின் இலட்சியமாக விளங்குவது மோட்சம். அந்த மோட்சத்தைச் சுயநல மற்ற கர்மத்தின்மூலமாக அடைவதுதான் கர்மயோகம். சுயநலமுடைய ஒவ்வொரு கர்ம மும், நாம் அந்த இலட்சியத்தை அடை வதைத் தாமதப்படுத்துகிறது. சுயநலமற்ற ஒவ் வொரு கர்மமும் நம்மை அந்த இலட்சியத்தை நோக்கி அழைத்துச் செல்கிறது.

ஆகவே, ஒழுக்கம் என்பதற்கு நாம் தரக் கூடிய ஒரே இலக்கணம் இதுதான்: சுயநலம் உள்ளது எதுவோ அது தீய ஒழுக்கம். சுயநலம் இல்லாதது எதுவோ அதுவே நல்லொழுக்கம்.

கர்மயோகி ஒருவன், எந்தக் கொள்கையிலோ கோட்பாட்டிலோ நம்பிக்கை கொண்டிருக்க வேண்டுமென்ற அவசியம் இல்லை. அவன் கடவுளிடமும் கூட நம்பிக்கை இல்லாதவனாக இருக்கலாம். ஆத்மா என்பது என்ன என்ற ஆராய்ச்சியே செய்யாமல் இருக்கலாம். எந்த விதமான தத்துவ ஆராய்ச்சியைப் பற்றியும் சிந்திக்காமல் இருக்கலாம். தனக்கென்று அவன் தனியாக ஒரு நோக்கம் கொண்டிருக் கிறான். தன்னல மறுப்பு என்ற இலட்சியத்தை அடைவதே அந்த நோக்கம். தானே உழைத்து தன்போக்கில் அவன் இந்த இலட்சியத்தை அடைந்தாக வேண்டும். அவனுடைய வாழ்க் கையில் ஒவ்வொரு வினாடியும் பெரிய இலட்சி யம் ஒன்றைச் சாட்சாத்காரம் செய்யும் வினாடி யாகவே இருக்க வேண்டும்.

ஏனென்றால் எந்தப் 'பிரச்சினையை ஞானி ஒருவன் தன்னுடைய விவேகத்தைக் கொண் டும் மெய்யுணர்வைக் கொண்டும் தீர்க்க முயற்சி செய்கிறானோ, பக்தன் தனது பக்தி யைக் கொண்டு தீர்க்க முயற்சி செய்கிறானோ, அதே பிரச்சினையைக் கர்மயோகி ஒருவன் கொள்கை—கோட்பாடு ஆகியவைகளின் உதவி இல்லாமலேயே, வெறும் கர்மத்தின் மூல மாகவே தீர்த்துக்கொள்ள வேண்டியவனா கிறான்.

ஒரு கர்மத்தைச் செய்ய ஆரம்பிக்கும்போது, பொதுவாக நாம் பேரார்வம் கொண்டவர்க ளாகச் செயல்படுகிறோம். இந்தப் பேரார்வமும் உணர்ச்சி வேகமும் நம்மிடம் இல்லாமல் போனால், 'நம்மால் திறமையாகக் கர்மம் செய்ய முடியுமா என்ன?' — என்று பலர் என்னைப் பல தடவைகள் கேட்டிருக்கிறார்கள். பல ஆண்டு களுக்கு முன்பு நானும் அவர்களைப் போலவே தான் நினைத்து வந்தேன். ஆனால் இப்போது எனக்கு வயது ஆக ஆக, அனுபவம் அதிகரிக்க அதிகரிக்க, அவ்விதம் நான் நினைத்தது தவறு என்பதைக் காண்கிறேன்.

உண்மை என்னவென்றால், ஆர்வ வெறி யும் உணர்ச்சி வேகமும் குறையக் குறையத் தான், நாம் மேலும் மேலும் சிறப்பாகக் கர்மம் செய்வோம். எவ்வளவுக்கெவ்வளவு நாம் அமைதியாக இருக்கிறோமோ, அவ்வளவுக்கவ் வளவு நமக்கு நல்லது. அவ்வளவுக்கவ்வளவு நாம் செய்யும் வேலையின் அளவும் அதிக மாகும்.

நமது உணர்ச்சிகளை நாம் தாராளமாகப் பெருக விட்டுவிடும்போது, நம்முடைய சக்தி யை அந்த அளவுக்கு வீணாக விரயம் செய்து விடுகிறோம். நம்முடைய நரம்புகளைத் தகர்த்துக் கொள்கிறோம். உள்ளத்தின் அமைதியைக் குலையும்படி செய்கிறோம். மிகவும் சொற்ப மான காரியத்தையே செய்து சாதிக்கிறோம். அந்த நிலையில் கர்மமாக வெளிப்பட்டிருக்க வேண்டிய சக்தி, வெறும் உணர்ச்சியாகச் செலவழிக்கப்பட்டு விடுகிறது. அந்த உணர்ச் சியோ ஒன்றுக்குமே பயன்படாமல் வீணாகப் போகிறது.

மனமானது மிகமிக அமைதியாக இருக்கும் போதுதான், சிதறாமல் மனம் ஒருமுகப்பட்டு

இருக்கும்போதுதான், அந்த மனதினுடைய ஆற்றல் முழுவதும் நல்ல காரியங்கள் செய்வதில் செலவழிக்கப்படுகிறது.

உலகிலே தோன்றியுள்ள மிகப்பெரிய கர்ம வீரர்களுடைய வாழ்க்கை வரலாறுகளைப் படித்துப் பாருங்கள். அவர்கள் ஆச்சரியப்படத்தக்க வகையிலே அமைதி நிறைந்த புருஷர்களாக இருந்தது உங்களுக்குத் தெரியவரும். எந்த நிகழ்ச்சியின் காரணமாகவும் அவர்கள் தங்களுடைய திடமான மனநிலையைக் குலைத்துக் கொண்டார்கள் என்பதே இல்லை. சமநிலையில் இருந்து பிறழ்ந்தனர் என்பதே இல்லை. ஆதலால்தான் கோபத்துக்கு வசப்படும் மனிதன் மகத்தான எந்த ஒரு பெரிய காரியத்தையும் செய்வதாக நாம் பார்ப்பதில்லை.



ஆனால், எதனாலும் கோபம் கொள்ள முடியாதவனே, மிக அதிகமாகச் செய்து சாதிக்கிறான். கோபம், பகை, அல்லது அவை போன்ற வேறு எந்த விருப்பு வெறுப்புக்கோ இடம் கொடுத்துவிடும் மனிதன் சரியானபடி காரியம் செய்ய முடியாது. அவன் தன்னைத்தானே தூள் தூளாக நொறுக்கிச் சிதறும்படி செய்து கொள்கிறான், அவ்வளவுதான்! ஆக்கப்பூர்வமான பணி எதையும் அவன் சாதிக்க மாட்டான்.

எந்த மனமானது அமைதி நிறைந்ததாகவும், மன்னிக்கும் இயல்பு கொண்டதாகவும், எல்லா நிலைகளிலும் ஏற்றத் தாழ்வு இல்லாமல் சம நிலையைக் காப்பதாகவும் உள்ளதோ, அந்த மனம்தான் மிகப் பெரிய அளவில் கர்மத்தைச் செய்து முடிக்கும்.

தாமரை இலை, நீரிலேதான் முளைத்து எழுகிறது. ஆனால் நீர் அதை ஒருபோதும் ஈரப்படுத்துவதில்லை. மனிதன் இந்த உலகில் தாமரை இலையைப் போல வாழ வேண்டும். இதயத்தை ஆண்டவனுக்குச் சமர்ப்பித்தும், கைகளைக் கர்மத்தில் ஈடுபடுத்தியும் பூவுலகிலே வாழ்ந்து வரவேண்டும்.

வெறும் பேச்சு ஒன்றுக்கும் உதவாது, எந்தக் காரியத்தையும் சாதிக்காது. கிளிப்பிள்ளைக்குக் கூடத்தான் பேசத் தெரியும். அதனால் என்ன பயன் ஏற்படும்? பற்று இல்லாமல் கர்மம் செய்வதன் மூலமே பரிபூரண நிலை வருகிறது.



எம்பெருமான் தன்சரிதை செவியால் கண்ணால்
பருகுவோம் இன்னமுதம் மதியோ மன்றே.

—குலசேகர ஆழ்வார்

ஸ்ரீகிருஷ்ணன், ஈச்வரன், பரமன், சச்சிதானந்த வடிவம் உடையவன். அனாதி, ஆதி கோவிந்தன். உலகத்திற்கெல்லாம் காரணப் பொருள் எதுவோ அதற்கும் காரணம் ஆனவன். சப்தப் பிரம்ம மயமான வேணுவைத் தாமரை வாயில் வைத்து ஊதுபவன். அந்தந்த ஆவரண கணங்கள் ஆகிய அம்சங்களால் துதிக்கப்படுபவன்.

ஒன்றானவனும், நழுவுதல் இல்லாதவனும், அனாதியாய் அளவில்லாத உருவங்களை உடையவனும், ஆதியும், புராண புருஷனும், புதிய இளமை உள்ளவனும், வேதங்களுக்கு எட்டாதவனும், கிருஷ்ண பக்தர்களுக்குச் சுலபமானவனும், ஆதி புருஷனுமாகிய கோவிந்தனை வணங்குகிறேன்.

—பிரம்ம ஸம்ஹிதை





# தீபாவளி

திருமுருக கிருபானந்தவாரியார்

தீபாவளி என்னும் நன்னுளைப் பொன்னு ளாக யாண்டுங் கொண்டாடுகிறுர்கள். ஆனல் அதன் உண்மையறிந்தவர்கள் ஒரு சிலரே யாவார்கள். அதனைச் சிறிது இங்கு விளக்கு வாம்.

பெரும்பாலோர், நரகாசுரனைக் கண்ண பிரான் சங்கரித்தார். அந்த அரக்கனை யழித்த நாளே தீபாவளி என்று கூறிக்கொண்டிருக் கிறுர்கள்.

நரகாசுரனைச் சங்கரித்த நாள் அதுவாக இருக்கட்டும். ஆனல் கேவலம் ஒரு கொடிய வனைக் கொன்ற நாளுக்கு, ஒரு கொண்டாட் டம் நிகழ்வது, யாண்டும் எக்காலத்தும் இருந்த தில்லை. அப்படி இருக்குமாயின், இரணியனைக் கொன்ற நாள், இராவணனைக் கொன்ற நாள், கம்சனைக் கொன்ற நாள், இடும்பனைக் கொன்ற நாள், துரியோதனனைக் கொன்ற நாள், அவ் வாறே அந்தகாசுரன், சலந்தராசுரன், இரண் யாட்சன், திருவணுர்த்தன், இப்படி புகழ் படைத்த அரக்கர்கள் ஒவ்வொருவரையும் கொன்ற நாட்களையெல்லாம் கொண்டாடு வதாயின், ஆயுளே அதற்குச் சரியாகிவிடும். ஆகவே, நரகாசுரனைக் கொன்றதற்காகத் தீபா வளி ஏற்பட்டதன்று.

தீபம் . . .விளக்கு; ஆவளி — வரிசை.

தீபத்தை வரிசையாக வைத்து சிவபெரு மானை வழிபடுவதற்கு உரிய நாள், தீபாவளி என்று உணர்க. தீபமங்கள ஜோதியாக விளங் கும் சிவபெருமானை, நிரம்பவும் விளக்கேற்றி வழிபட்டார்கள் நமது முன்னோர்கள். திருக் கார்த்திகையில் விளக்கேற்றி வணங்குகின்றுர் களன்றே?

"விளக்கீடு காணுதே போதியோ
பூம்பாவாய்"

—என்பது ஞானசம்பந்தர் திருவாக்கு.

சிவ விரதம் எட்டு எனக் கந்தபுராணத்தின் ஏழாவது காண்டமாகிய உபதேச காண்டம் புகல்கின்றது.

**அவையாவன:—**

*(1)* சோமவார விரதம்.
*(2)* உமாமகேச்சுர விரதம் (கார்த்திகை மாத பௌர்ணமி).
*(3)* திருவாதிரை விரதம் (மார்கழியில்)
*(4)* சிவராத்திரி விரதம் (மாசியில்)
*(5)* கல்யாண விரதம் (பங்குனி உத்திரம்)
*(6)* பாசுபத விரதம் (தைப்பூசம்)
*(7)* அஷ்டமி விரதம் (வைகாசி பூர்வபட்ச அஷ்டமியில்)
*(8)* கேதார மாவிரதம் (இதுதான் தீபா வளி)

**இந்த விரதம் நோற்கும் முறை:**

புரட்டாசி மாதம் பூர்வபட்சம் அஷ்டமியில் தொடங்குதல்வேண்டும். நிறைகுடம் வைத்து, அதில் சிவபெருமானை ஆவாகனம் செய்து, இருபத்தொரு இழையுடைய நூலைக் கையில் புனைந்து, அர்ச்சனை செய்து, தூபதீப நிவே தனம் புரிந்து வழிபட வேண்டும்.

ஐப்பசி மாத அமாவாசைக்கு முந்தின நாள் சதுர்த்தசியினன்று, அதிகாலையிலெழுந்து நீராடி, தூய ஆடையுடுத்து, நெல்லின் மீது நிறைகுடம் வைத்து, அதில் சிவமூர்த்தியை நிறுவி, சிவமாகவே பாவனை புரிந்து, பக்தி பரவச மாக அர்ச்சித்துப் பாராயணம் புரிந்து, தூப தீப நிவேதனங்கள் செய்து வழிபட வேண்டும்.

மறுநாள் அமாவா சயன்று காப்பை யவிழ்த்துவிட்டு உணவருந்த வேண்டும். இந்த விரதம் கேதார விரதம் எனப்படும்.

பிருங்கி முனிவர் சக்தியை விலக்கிச் சிவ பெருமானை மட்டும் வலம் வந்து வழிபட்ட காரணத்தினுல், உமாதேவியார் வெகுண்டு,

இடப்பாகம் பெறும் பொருட்டு, திருக்கயிலாய மலையினின்றும் நீங்கி, கௌதம முனிவருடைய வனத்தை அடைந்தனர். அவ்வனம் அம்பிகையின் வரவினுல் மிகவும் செழிப்புற்றது. பாம்பும் தவளையும், அரவும் கிரியும், உரகமுங் கருடனும் உறவாடின.

கௌதமர், கௌரியைத் தொழுது துதித்தார். இந்த விரதத்தை கௌதமர் கூற, விதிப்படி உமையம்மையார் நோற்று, இறைவருடைய இடப்பாகத்தைப் பெற்று மகிழ்ந்தார்.

கௌரி நோற்ற காரணத்தால், கேதார கௌரி விரதம் எனவும் இது பேர் பெற்றது.

இருபத்தொரு நாள் அனுஷ்டிக்க முடியாதவர்கள், ஐப்பசி தேய்பிறைச் சதுர்த்தசியன்று மட்டும் மேற்கூறிய முறைப்படி அனுஷ்டிக்க வேண்டும்.

இவ்விரதத்தை எல்லோரும் மேற்கொண்டு, அன்று சிவமூர்த்தியை வழிபட்டு, நலம் பெறுதல் வேண்டும். தீபங்களை வரிசையாக ஏற்றி அன்புடன் வழிபட வேண்டும்.

தீபாவளியன்று மது மாமிசங்களையுண்டு களியாட்டம் களிக்கின்ற மாந்தர் பெரும் பாவத்திற்கு ஆளாவர். இனியேனும் அந்தத் தீயநெறியைக் கைவிட்டுத் தூய நெறி நின்று நலம் பெறுவார்களாக.



**சிந்தனைச்சோலை:**

# மகான்களின் தொடர்பு

**பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா**

தேவரிஷிகளுள் தம்மை நாரதர் என்று கீதையில் கண்ணபிரான் குறிப்பிடுகிருர். அந்தக் கண்ணபிரானை, நாரதர் ஒருமுறை சந்தித்தபோது 'பிரபு, சத்சங்கத்தால் ஒருவன் பெறக்கூடிய பயன் எத்தகையது என்பதை விளக்கியருள வேண்டும்' என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

கண்ணபிரான் உடனே பதில் சொல்லவில்லை. நாரதரே கேள்விக்கு உரிய பதிலை அனுபவ பூர்வமாகத் தெரிந்துகொள்வது நலம் என்று பகவான் கருதினுர் போலும்!

ஆகவே, அவர் நாரதரைப் பார்த்து, "கிழக்கு திசையை நோக்கிச் செல்லுங்கள். அங்கே ஒரு குப்பைமேடு இருக்கிறது. அதில் உள்ள சாணிப்புழுவிடம் உங்களுடைய கேள்வியைக் கேளுங்கள்" என்று சொன்னுர்.

நாரதர் பகவானின் ஆணைப்படி, உண்மையை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலோடு குப்பைமேடு இருந்த இடத்தை அணுகினுர். அங்கே, பகவான் குறிப்பிட்ட சாணிப் புழு இருந்தது. அதைப் பார்த்துத் தன்னுடைய கேள்வியைக் கேட்டார் நாரதர். அவருடைய கேள்விக்காகவே காத்திருந்ததைப் போல, நாரதர் கேள்வியைக் கேட்டு முடித்தாரோ இல்லையோ, உடனே புழு அப்படியும்



இப்படியுமாக நெளிந்தது. மறு வினுடியே இறந்து போய்விட்டது!

இதைக் கண்ட முனிவரின் உள்ளம் பெரிதும் புண்பட்டு வருந்தியது. அவர் வருத்தத்துடன் ஸ்ரீ பகவானிடம் சென்றூர். நடந்ததைத் தெரிவித்தார்.

கண்ணபிரான், நாரதர் சொன்னதைக் கேட்டுவிட்டு, ''இப்போது நீங்கள் ஒரு காரியம் செய்ய வேண்டும். நேராக வடக்கு நோக்கிப் போங்கள். எதிரே பாழடைந்த ஒரு கோயில் இருப்பதைப் பார்ப்பீர்கள். அந்தக் கோயில் கோபுரத்திலே ஒரு புரு வாழ்ந்து வருகிறது. அந்தப் புருவிடம் உங்களுடைய கேள்வியைக் கேளுங்கள்'' என்று சொன்ஞர்.

நாரதர், ஸ்ரீபகவான் சொன்னபடியே வடக்கு நோக்கிப் புறப்பட்டுப் போனுர். 'கோபுர தரிசனம் பாப விமோசனம்' என்று சொல்வார்கள். அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த கோபுரத்தை அணுகினுர் நாரதர். அங்கே பகவான் குறிப்பிட்ட புரு இருந்ததைப் பார்த்தார். அதனிடம் 'புருவே, சத்சங்கத்தால் எப்படிப்பட்ட பயன் விளைகிறது என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்று வினவினுர். பதில் கிடைக்கும் என்று ஆவலோடு தேவரிஷி காத்திருந்தார். ஆனுல், புரு ஒன்றுமே பதில் சொல்லவில்லை. அது 'படபட' என்று தன்னுடைய இரண்டு சிறகுகளையும் அடித்துக்கொண்டது. மறுவிளுடியே மகரிஷியின் காலில் விழுந்து உயிரை விட்டது!

கருணை உள்ளம் கொண்ட நாரதர் அதிர்ந்து போனுர். ''ஐயோ, நான் கேள்வி கேட்ட உடனேயே புழுவின் உயிர் பறிபோயிற்று. இப்போது புருவின் உயிரும் போய் விட்டதே! இரண்டு ஜீவன்களின் மரணத்துக்கும் நானே காரணமாக அமைந்துவிட்டேனே! இரண்டு ஜீவன்களின் உயிருக்கு நானே உலைவைத்து விட்டேனே!'' என்று நாரதரின் உள்ளம் உள்ளபடியே நைந்து நைந்து உருகியது. திரும்பத் திரும்ப நடந்ததையே நினைத்து அவர் மிகவும் மனம் வருந்தினுர். துக்கம் தொண்டையை அடைக்க நாரதர் பரமாத்மாவிடம் சென்றூர். நாரதருடைய வருகைக்காவே காத்திருந்ததைப் போல, பரமன் அவரைப் பார்த்ததும், 'என்ன, மகரிஷி! விடை கிடைத்துவிட்டதா?' என்று கேட்டார்.

நாரதருக்குப் பேசக்கூட வாய் வரவில்லை. அவருக்கு அழுகைகூட வந்துவிடும் போல இருந்தது. ஒருவிதமாக தன்னை அவர் சமாளித்துக்கொண்டு உள்ளம் கனக்க, நடந்ததை ஸ்ரீபகவானுக்குத் தெரிவித்தார்.

''அப்படியா நாரதரே!'' கண்ணபிரான் தொடர்ந்தார், ''நீங்கள் ஒரு காரியம் பண்ணுங்கள். தெற்கு திசையிலே ஓர் அரசன் இருக்கிறுன். அவனுக்கு இன்றைய தினம் தான் ஓர் ஆண் குழந்தை பிறந்திருக்கிறது. அந்தக் குழந்தையிடம் நேராக இப்போது போய், உங்களுடைய சந்தேகத்தைக் கேட்கலாம். உங்கள் சந்தேகம் பறந்து போய் விடும்.''

நாரதர், முதல் இரண்டு முறை பகவான் சொன்ன உடனேயே பதில் கிடைக்கும் என்று நடையைக் கட்டியதைப் போல, இப்போது செய்யவில்லை. காரணம், புழுவும் புருவும் கண் முன்னுல் மாண்டதைப் போல, பகவான் குறிப்பிட்ட இளவரசனும் மாண்டுவிட்டால் என்ன செய்வது என்ற பயம் அவரை வாட்டியது. மேலும், குழந்தை இறந்து, அது அரசனுக்கும் தெரிய வரும்போது, அரசன் நாரதரை தண்டிக்கவும் முயற்சி செய்யக்கூடும்! இவைகள் எல்லாவற்றையும் சிந்தித்து பார்த்த நாரதர், அவைகளைப் பரமனிடம் பணிவாகத் தெரிவித்துக் கொண்டார்.

நாரதரின் உள்ளக் கிடக்கையை ஸ்ரீகிருஷ்ணரும் புரிந்து கொண்டார். பகவான், நாரதருக்குப் பல ஆறுதல் வார்த்தைகளைச் சொல்லி 'அசம்பாவிதமாக எதுவுமே நடந்துவிடாது. இந்தமுறை உங்களுடைய கேள்விக்குப் பதில் நிச்சயம் கிடைக்கும். போய் வாருங்கள்' என்று உறுதி கூறி தேவரிஷியை வழியனுப்பி வைத்தார்.

நாரதர், ஸ்ரீகண்ணபிரான் குறிப்பிட்ட அரசனின் மாளிகையை அடைந்தார். அங்கே ஒரு தொட்டிலில் பெருமான் குறிப்பிட்ட குழந்தை இருந்தது. நாரதர் தயங்கியபடியே 'குழந்தாய், சத்சங்கத்தால் எப்படிப்பட்ட பயன் ஏற்படுகிறது என்பதை எனக்குச் சொல்வாயா?' என்று கேட்டார்.

அப்போது, நாரத முனிவர் கொஞ்சமும் எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி நடந்தது. பட்டுத் தொட்டிலைவிட்டு பாலகன் கீழே இறங்கினுன்!

சில விநாடிகளில் பாலகன் தேவனாக மாறி, தேவரிஷி நாரதரைப் பணிவோடும் பக்தியோடும் வணங்கினான்!

முனிவருக்கு வியப்புத் தாங்க முடியவில்லை. ஆச்சரியத்தால் வாயடைந்துப் போய்விட்டார் என்றே சொல்ல வேண்டும். தேவன், நாரதரை வணங்கியபடி சொன்னான்: ''பிரபோ! அடியேன் வேறு யாருமல்ல; குப்பைமேட்டில் சாணிப்புழுவாக இருந்த கடையன் நான் தான். தாங்கள் அங்கே வந்ததின் மகிமை காரணமாக, புழுவாகும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. புழுவின் பிறவியிலும் தங்களின் அருள் வரவும் தரிசனமும் எனக்குக் கிடைத்த காரணத்தால், இந்த அரண்மனையில் இளவரசனாகப் பிறந்தேன். இந்தப் பிறவியிலும் தெய்வ புருஷராகிய தங்களின் தொடர்பு கிடைத்ததால், இப்போது தேவனாகும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைத்தது. இந்த என்னுடைய வரலாறும் வளர்ச்சியும் சத்சங்கம் விளைவித்த அற்புதமே ஆகும்'' என்று கூறிவிட்டு தேவலோகத்தை நோக்கிப் பறந்து சென்றான்.

கைப்புண்ணுக்குக் கண்ணாடி தேவையில்லையே! சத்சங்கத்தின் மகிமையை நாரதர் அப்போது உணர்ந்து கொண்டார்.

* * *

சத்சங்கத்தின் ஒப்பற்ற மகிமையை மேலே குறிப்பிட்ட கதை உள்ளத்தில் நன்கு பதியும் வகையில் தெளிவாக விளக்குகிறது.

ஒருவர் தெரிந்து குடித்தாலும், தெரியாமல் குடித்தாலும், பால் அவருடைய உடலுக்கு நன்மையையே தருகிறது. தெரிந்து கை வைத்தாலும், தெரியாமல் கை வைத்தாலும் நெருப்பு சுடவே செய்யும். நாமாக தெரிந்து ஆற்றில் விழுந்தாலும், அல்லது எதிர்பாராத விதத்தில் பிறர் நம்மை விழும்படி செய்தாலும், நமது உடல் நனைந்து போவது உறுதி. அதேபோல சத்சங்கத்தை நாமாகத் தெரிந்து நாடினாலும் சரி, தெரியாமல் தற்செயலாக நமக்கு வாய்த்தாலும் சரி, அதனுடைய நற்பயன் நமக்கு விளைவது நிச்சயம். ஆனால், தெரிந்து சிரத்தையோடு சத்சங்கத்தை நாடும்போது, அதனுடைய பலன் ஒருவித ஆற்றலோடு விரைந்து வருகிறது.

மக்கள் எப்படிப்பட்டவர்களாக இருந்தாலும், அனைவரின் இதயக் குகைகளிலும் இறைவன் உறைகிறார் என்பதுதான் உண்மை. ஆனால், சாதுக்களிடமே தெய்வத்தின் பிரகாசம் ஒளிவிட்டுப் பெருமளவில் பிரகாசிக்கிறது. நெருப்புக் குவியலில் எறியப்படும் பொருள் எல்லாமே நெருப்பு மயமாக ஆவதைப் போல, அனுபூதிமான்களாகிய சாதுக்களின் தொடர்பு, தீயவர்களையும் எல்லாக் குற்றங்களில் இருந்தும் விடுவித்து மேன்மை பெறச் செய்கிறது.

ஒரு புத்தகத்தை நமக்கு ஒருவர் கொடுக்கிறார். ஒருவர் கையிலிருந்து மற்றொருவர் கைக்குப் புத்தகம் மாறிவிட்டதைக் கண்கூடாக நம்மால் பார்க்க முடிகிறது. சத்சங்கத்தால் விளையும் பயனை, புத்தகம் மற்றொருவர் கைக்கு மாறி இருப்பதைக் காண்பது போல, ஸ்தூலமாக புறக்கண்ணால் நம்மால் பார்க்க முடியாது. ஆனால் உண்மையான சத்சங்கம் தனக்குரிய பலனைத் தருவது உண்மையிலும் உண்மை. சாதுக்களின் தொடர்பால் விளையும் பயனை ஸ்தூலமாக உணர முடியாவிட்டாலும், அதன் பயன் நிச்சயம் இருக்கவே இருக்கிறது. விரும்பினாலும்கூட, நாமே வேண்டாம் என்று நினைத்தாலும்கூட, நம்மால் சத்சங்கத்தின் பயனைத் தவிர்க்க முடியாது.

உண்மையான சத்சங்கம், மிகப் பெரிய பாவியையும் கூட மாயையில் இருந்து விடுபடச் செய்யும் ஆற்றல் கொண்டது. ஆனால், அப்படிப்பட்ட சத்சங்கம் கிடைப்பது மிகமிக அரிது. ஆடுகளையும் மாடுகளையும் சுலபமாக மந்தையாகப் பார்க்க முடியும். ஆனால் சிங்கங்களை அப்படி மந்தையாகப் பார்க்க முடியாது அல்லவா?

செய்த பாவமெல்லாம், சான்றோராகிய மகானின் கடைக்கண் கருணைப் பார்வைபட, நம்மை விட்டுப் பறந்து ஓடோடிவிடும் என்பது உண்மையே.

சத்சங்கம், அனுபூதிமான்கள் எழுதிய நூல்களைப் படிப்பது, ஞான சாதனம் கொண்ட தவ வாழ்க்கை — ஆகிய இவைகள்தாம், நாம் இந்த உலகிலேயே சேர்க்கக்கூடிய உண்மையான செல்வங்கள் ஆகும். இவைகள்தாம் நமது ஆன்மாவைக் காப்பாற்றவும் போகின்றன. இவைகளைத் தவிர போகும்போது, வேறு எதை நாம் நமது தலையில் கட்டிக்கொண்டு போகப் போகிறோம்?

வங்கத்திலே சென்ற நூற்றுண்டில் அனுபூதிச் செல்வராக வாழ்ந்த பெருமான் ஸ்ரீராம கிருஷ்ணதேவர். அவரது காலத்தில் கிரிஷ் சந்திரகோஷ் என்னும் பிரபல நாடகாசிரியர் ஒருவர் இருந்தார். அவர் 'ஸ்டார் தியேட்டர்' என்னும் நாடக மன்றத்தை நிறுவிப் பலருக்கும் பயிற்சி அளித்து வந்தார். தாமும் நடித்து வந்தார். மனம்போன போக்கெல்லாம் போக வேண்டாம் என்னும் கொள்கைக்கு நேர் மாருக வாழ்ந்தவர் அவர். இளமையும் செல்வத் துடுக்கும் அவரைத் தியநெறிகள் அத்தனையிலும் ஈடுபடும்படி செய்துவிட்டன.

மிதமிஞ்சிய குடியும் சிற்றின்ப நாட்டமும் கொண்ட அவரை, பரமஹம்ச தேவர் தடுத்தாட்கொண்டார். அவ்வளவுதான்! கிரிஷின் வாழ்க்கையே அடியோடு முற்றிலும் மாறி விட்டது! பிற்காலத்தில் அவர், சுவாமி விவேகானந்தரைப் போன்ற தவ ஞானிகள் போற்றிப் பாராட்டும் மகானின் நிலையை அடைந்தார்.

இது பரமஹம்ச தேவரின் சான்னித்தியம் தந்த பரிசுதானே?

ஃ ஃ ஃ

சான்ருே ரினத்திரு. பெரியாரைத் துணைக் கொள்.

—ஆத்திச்சூடி

நல்லவர்களோடு உறவாடுங்கள். நீங்களும் நல்லவர்களாக முடியும்.

—சீனப் பழமொழி.

பகவானின் கிருபையால்தான் சாது சங்கத்தை அடைய முடிகிறது.

—நாரத பக்தி சூத்திரம்.

மகான்களின் தொடர்பு அடைவதற்கு அரியது. நாமாகத் தேடிச் செல்வதற்கு உரியது. அதனுடைய பயன் ஒருகாலும் வீணுகாமல் நிகழக்கூடியது.

—நாரத பக்தி சூத்திரம்.

அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப் பேணித் தமராக் கொளல்.

—திருக்குறள்.

தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல் வன்மையுளெல்லாந் தலை.

—திருக்குறள்.

நறுமணம் காற்றடிக்கும் பக்கமாகத்தான் பரவும். காற்றுக்கு எதிராகப் போகாது. ஆனுல், நல்ல மனிதருடைய வாசனை காற்றையும் எதிர்த்து எங்கும் எல்லா இடங்களுக்கும் செல்லும்.

—புத்தர்.

எழுந்திருங்கள்! விழித்துக் கொள்ளுங்கள்! சிறந்த ஆசாரியர்களை அடைந்து ஞானத்தைப் பெறுங்கள்.

—கட உபநிஷதம்.

பணிவாலும், பரிவு மிகுந்த கேள்வியாலும், சேவையாலும் அதை அறிக. மெய்ப்பொருள் கண்ட ஞானிகள் உனக்கு ஞானத்தை உபதேசிப்பார்கள்.

—கீதை.

கங்கை நதி பாவத்தைப் போக்கும். மதி நிலா உஷ்ணத்தைப் போக்கும். கற்பக மரம் வறுமையைப் போக்கும். ஆனுல் சாதுக்களின் சேர்க்கை பாவம், தாபம், வறுமை மூன்றையும் உடனே போக்கும்.

—ஒரு சம்ஸ்கிருத சுலோகம்.

சாதுக்களின் தொடர்பால் பற்றின்மை ஏற்படும். பற்றின்மையால் மோகம் (மதிமயக்கம்) நீங்கும். மோகம் நீங்கினுல் திடமான தத்துவ ஞானம் உண்டாகும். தத்துவ ஞானத்தால் ஜீவன் முக்தி நிலை வருகிறது.

—பஜ கோவிந்தம்.

மனிதப் பிறவி, முக்தியைப் பெறவேண்டும் என்ற ஆவல், மகா புருஷர்களை நாடி அடைதல் – ஆகிய இம்மூன்றும் அடைதற்கு அரியவைகள். தெய்வத்தின் கிருபையால் மட்டுமே அடைய முடியும்.

—விவேக சூடாமணி.

நாரதர் வியாசருக்குத் தமது சுய சரிதையைக் கூறும்போது, முந்திய கல்பத்தில் சாதுக்களுக்குப் பணிவிடை செய்ததையும், அதன் காரணமாக அவர்களுடைய கிருபைக்குப் பாத்திரமாகி அடுத்த பிறவியில் தேவரிஷியானதையும் குறிப்பிட்டிருக்கிருர்.

—பாகவதம்.

நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்ப துவுநன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று.

—வாக்குண்டாம்.

மாயையைத் தாண்டுபவர் யார்? மாயையைத் தாண்டுபவர் யார்? பற்றினை அறுப்பவர், மகிமை பொருந்திய மகான்களைச் சேவிப்பவர், மமகார உணர்ச்சியை நீக்குகின்றவர் — ஆகிய இவர்களே மாயையைத் தாண்டுவோர் ஆவர்.

—நாரத பக்தி சூத்திரம்.

சம நோக்கு உள்ளவர்கள், சாந்தமானவர்கள், கோபம் அற்றவர்கள், அனைவரிடமும் அன்பு பாராட்டுபவர்கள், நல்ல ஒழுக்கம் உடையவர்கள் — ஆகிய இவர்கள்தான் மகான்கள் ஆவார்கள். மகான்களுக்குச் செய்யும் தொண்டு மோட்சத்திற்கு வாயில் என்றும், பெண்களுடன் கூட்டுறவு கொண்டவர்களின் தொடர்பு அஞ்ஞான வாயில் என்றும் கூறு கூறுவர்.

—பாகவதம்.

மன அமைதி உள்ளவர்களும், மகான்களும், வசந்த காலத்தைப் போல உலகிற்கு நன்மை செய்பவர்களும், பயங்கரமான பிறவிக் கடலைத் தாங்கள் தாண்டியவர்களும், பிற மனிதர்களையும் காரணத்தை வேண்டாமலேயே தாண்டுவிப்பவர்களுமாகிய சாதுக்கள் உலகிலே இருக்கிறார்கள்.

—ஒரு சம்ஸ்கிருத சுலோகம்.



# சுவாமி அத்புதானந்தரின் போதனைகள்

ஒரு பக்தனோ, துறவியோ, அல்லது சாதாரண இல்லறத்தவனோ, யாராகயிருந்தாலும் எவரைப் பற்றியும் அவதூறாகப் பேசாதே. யார் ஒருவர் தவறு செய்துவிட்டாலும் அதற்காக அவரை வெறுக்காதே. என்ன இருந்தாலும் ஒவ்வொருவனும் ஆண்டவனின் குழந்தையே ஆவான். இன்றைக்குச் செய்யும் பாவம் அந்தப் பாவியை நாளைய தினம் புனிதவானாக ஆக்கிவிடாது என்று யார் கண்டார்கள்? ஒரு கணம் ஆண்டவனிடம் அன்பு செலுத்துவதைப் போல, மற்ற செய்கைகள் எதுவும் அவ்வளவு முக்கியமானவைகள் அல்ல. ஒரு கணமாகிலும் கடவுளிடம் அன்பு செலுத்தியவன் பாக்கியசாலி ஆவான். புனிதவான்களோ, பாவிகளோ, கடவுள் எல்லோரிடமும் அன்பு கொள்கிறார்.

பிறரிடம் குற்றம் காண்பது பெரிய பாவம். தாங்களாக ஒரு நல்ல காரியத்தையும் செய்யாத மக்கள்தான், சுலபமாக மற்றவர்களிடம் குற்றத்தைக் கண்டு ஊக்கத்துடன் அவதூறு பரப்புவதை எங்கும் நீ காணலாம்.

இறைவனிடம் நம்பிக்கை கொண்டு அவரிடம் அன்பு செலுத்துவதால், என்ன கிடைக்கும் என்று நீ கேட்கிறாய்? அவ்விதம் செய்யும் ஒருவன் தீமை செய்யும் சக்தியே அற்றவனாகிறான். அவனால் யாருக்குமே கேடு செய்ய முடியாமல் போகிறது. அவன் தனக்கும் அமைதி தேடிக்கொள்கிறான். மற்றவர்களுக்கும் அமைதியைச் சம்பாதித்துத் தருகிறான். நமக்கெல்லாம் மேலே கடவுள் ஒருவர் இருக்கவே இருக்கிறார். தீங்கு செய்பவர்கள் துன்பப்பட்டே ஆகவேண்டும்.

தேவைகள் என்னும் உணர்ச்சி உன்னிடம் இருக்கும் வரையிலும், மனப்பூர்வமாக உன்னால் இறைவனைக் கூவி அழைக்க முடியாது. மனிதனுடைய தேவைகளுக்கோ ஒரு முடிவே இல்லை. குறைபாடு என்னும் உணர்ச்சி ஒருவகையான தனி இயல்பு கொண்டது. அதைப்பற்றி நினைக்க நினைக்க அது மேலும் தடித்துப் போகிறது. விரியவும் செய்கிறது. ஆதலால், கடவுளை விரும்புபவர்கள் தியாகம் என்னும் வழியைப் பின்பற்ற வேண்டியது முற்றிலும் அவசியமாகும்.

உண்மையிலேயே கஷ்டமான சாதனை என்பது ஒன்று உண்டானால், அது மத வாழ்க்கையைப் பின்பற்ற முயற்சி செய்வதுதான். கடவுளுடைய கிருபை இல்லாமல் ஆத்ம சாதனையில் முன்னேற்றம் அடைவது இயலாத காரியம். ஒரு கடுஞ்சொல் நம்முடைய மனதைக் கலங்க அடித்து விடுகிறது. அப்படிப்பட்ட இயல்பு கொண்ட மனதைக் கொண்டு மத வாழ்க்கையைப் பயில்வது என்பது எளிதா என்ன? இந்தக் காலத்திலே 'ஆத்ம சாதனை' என்ற சொல்லைச் சொல்லாத உதடு இல்லை.

இது இந்தக் காலத்தைச் சேர்ந்த ஒருவனை பித்து என்றே சொல்ல வேண்டும். ஆனால் நான் கேட்பது இதுதான் — மக்களில் உண்மையில் எவ்வளவு பேர் ஆத்ம சாதனையை விரும்பி வேண்டுகிறார்கள்? அனேகமாக எல்லோருடைய விஷயத்திலுமே அது வெறும் உணர்ச்சி வேகத்தில் ஊறிக்கிடப்பதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. ஆனால் ஞான சாதனை சம்பந்தமான நடிப்புங்கூட நல்ல பலனையே தரும் என்பார்கள். அவ்வளவுதான் விஷயம்.



சுவாமி அத்புதானந்தர்

சமய சம்பந்தமான வழக்குகள், சம்பிரதாயக் கொள்கைச் சித்தாந்தங்கள் ஆகியவைகளை ஆயிரக்கணக்கில் தெரிந்து கொள்வதையும் பேசுவதையும் விட, ஆழ்ந்த பக்தியுடன் தொடர்ந்து இறைவனுடைய பெயரைச் சொல்லி அழைத்தபடி இருப்பது மிகவும் சிறந்ததாகும்.

எல்லா சமய சாஸ்திரங்களிலும் தடபுடலாகக் கோஷிக்கப்படும் சொற்கள் உள்ளன. அவைகளால் என்ன பயன் உண்டு? வாழ்க்கையில் செய்து சாதிக்க வேண்டியது, மத உண்மைகளை வாழ்க்கை அனுபவமாக ஏற்றுச் சுவீகரித்துக்கொள்ள வேண்டும் என்பதே ஆகும்.

நம்முடைய துஷ்ட மனம் ஒரு கணமும்கூட அமைதியாக ஓய்ந்திருக்க இயலாதது. அது ஒரு திட்டமும் இல்லாமல் இஷ்டப்படி எல்லாம் எல்லா திசைகளிலும் ஓடியபடி இருக்கிறது. இந்த மனதின் செயல்களின் மீது, அது எங்கெங்கே செல்கிறது என்பதைப் பற்றி மிகவும் ஜாக்கிரதையாக கவனித்து வர வேண்டும். இதைச் செய்வதற்கு சன்னியாசிகளுடைய தொடர்பு மிகவும் முக்கியமாகும். பிரார்த்தனையும் தியானமும் முக்கியமாகும். அப்போது மட்டுமே மனம் சிறிது சிறிதாக அடங்கும்.

தோட்டமும் தோட்டத்தின் விளைச்சலும் தோட்ட எஜமானனைச் சேர்ந்தவைகள். தோட்டத்தின் வேலைக்காரனுக்கு எதுவும் சொந்தமாகாது. எல்லாமே எஜமானனுடையனதான். ஆனால், தோட்டக்காரன் எஜமானனுடைய பொருள்களை எஜமானனிடம் மிகுந் பக்தியோடும் பணிவோடும் சமர்ப்பிக்கிறான். உலகில் உள்ள ஒவ்வொரு பொருளும் இறைவனுக்கே சொந்தமானது. நாம் அவருடைய தோட்டக்காரர்கள் மட்டுமே ஆவோம். 'நீயே என்னுடைய எஜமானன். நான் உன்னுடைய பணியாள்' — என்னும் இந்த மனப் பான்மையால் தூண்டப்பட்டு, நம்பிக்கையோடும் பக்தியோடும் நாம் இறைவனுடைய பொருள்களை அவருக்கே காணிக்கையாக்குகிறோம். இது தாஸ்ய பக்தி எனப்படும்.

மனதிலே ஒன்று, வெளியே ஒன்று என்ற பழக்கத்தை விட்டுவிடு. இந்தப் பழக்கம் உன்னிடம் இருப்பதால்தான் நீ முன்னேற்றம் அடைவதில்லை. உன்னுடைய பக்தியில் உண்மையும் சிரத்தையும் இருக்குமானால், நீ ஏன் முன்னேற்றம் அடைய மாட்டாய்? நீ ஏன் கடவுளைப் பார்க்க மாட்டாய்? கட்டாயம் முன்னேறிக் கடவுளைக் காண்பாய்.

நீ வழிபடும்போது முக்கியமாக உன்னிடம் இருக்க வேண்டியது, மனதை தெய்வத்திடம் நிலையாக நிறுத்துவதுதான். வழிபாடு என்றால் என்ன? கடவுளுடைய பொருளைக் கடவுளுக்கு சமர்ப்பிப்பதுதான். உணவைக் கடவுளுக்கு நிவேதனம் செய்யாமல் உண்பவன் திருட்டுக் குற்றத்துக்கு ஆளாகிறான். வழிபாடு நடக்கும் போது நம்பிக்கையும் பக்தியும் கூடவே இருக்குமானால், பகவான் அங்கு பிரசன்னமாகி இருக்கிறார். நம்பிக்கையும் பக்தியும் இல்லாமல் போனால், கடவுள் அந்த இடத்தைவிட்டே விரைந்து சென்று விடுகிறார்.

வெளியே பக்தி, உள்ளத்தில் வஞ்சகம்—இது மிகவும் ஆபத்தான விஷயம். இப்படிப்பட்ட உள்ளத்திலிருந்து பகவான் மிகமிக தூரத்தில் இருக்கிறார். இத்தகைய மனப்பான்மை கொண்ட உள்ளங்களில் சுயநல நோக்கங்கள் நிறைந்திருக்கும். அவர்கள் ஆன்மீகத் துறையில் முன்னேற மாட்டார்கள்.

'நான் இருக்கிறேன்; என்னுடைய இஷ்ட தெய்வம் இருக்கிறது — இவை தவிர வேறு ஒன்றுமே இல்லை' என்ற பாவனை உதிக்கும் போது மனம் தூய்மை அடைகிறது. இதுவே தியானமாகும்.



# சுவாமி பிரேமானந்தரின் போதனைகள்

தமிழாக்கம்: 'அண்ணு' சுப்ரமண்யம்

(ஒரு பக்தருக்குக் கூறியது) ஒரு குருவிடம் உபதேசம் பெறுவது மிகவும் அவசியம். பகவந் நாம உபதேசத்தை எவரிடம் உனக்கு நம்பிக்கையும் மரியாதையும் உள்ளதோ, அப்படிப்பட்ட எவரிடமிருந்தேனும் பெற்றுக் கொள்ளலாம். ஸ்ரீராமகிருஷ்ணர் பின்வருமாறு கூறுவதை நான் கேட்டிருக்கிறேன்; ''ஒருவருக்குக் குருவின் கிருபை இருக்கலாம், ஸ்ரீகிருஷ்ண பகவானின் கிருபை இருக்கலாம், அடியார்களின் கிருபை இருக்கலாம்; ஆனல் தன்னுடைய மனதின் கிருபை இல்லாவிட்டால் அவன் முற்றிலும் அழிந்து போவான்.''

ஒருவனுடைய மனதின் கிருபை என்பது என்ன? கடவுளை அடைய வேண்டும் என்ற ஆவலும், அதற்காகத் தீவிர முயற்சியை மேற்கொள்வதுமே மனதின் கிருபையாகும். மனதைப் பரிசுத்தம் செய்வதற்காக விடாமல் முயற்சிக்க வேண்டும். உன்னிடமே உனக்கு நல்ல நம்பிக்கை வேண்டும். ''நான் நிச்சயமாகக் கடவுளைக் காண்பேன், அதில் தோல்வி அடைய மாட்டேன்'' என்ற திட நம்பிக்கையும் நிச்சய புத்தியும் தேவை. பூமி பண்படுத்தப்பட்டுத் தயாராக இருந்தால், அதில் ஒரு நல்ல விதை விதைக்கப்பட்டதும் முளைத்து மரமாகும். கடவுளிடம் பக்தியை வளர்த்துவா. திடமான வைராக்கியமும் தீவிரமான ஆர்வமும் உன்னை ஆட்கொள்ள வேண்டும். அப்போதுதான் பகவானுடைய அருளைப் பெற்று நீ மனதில் சாந்தியை அடைவாய். தனிமையில் இருந்து கொண்டு பகவானை பஜனை செய். உன்னுடைய முழுமனதோடும் உள்ளன்போடும் அவரைக் கவர வேண்டும். அப்போதுதான் அவர் உனக்குக் காட்சி அளிப்பார்.

(ஒரு துறவிக்குக் கூறியது) மற்றவர்களின் மீது ஆணையும் அதிகாரமும் செலுத்தும் நிலைமையை ஏற்றுக்கொள்ளாமலிருப்பது சிறந்ததாகும். அதை எப்படி உபயோகிப்பதென்று உனக்குத் தெரியாவிட்டால், அது பெரிய ஆபத்துக்கு இடமாகும். பகவத்கீதை, பற்றற்றதும் பரிசுத்தமானதும் சுயநலமற்றதுமான பணியின் ரகசியத்தை நன்கு விளக்குகிறது. நம்முடைய நடமாடும் கீதையாகிய இராமகிருஷ்ணரும் அவ்விதமே விளக்கியுள்ளார்.

அந்தோ! அந்த மனிதர் சொன்ன சில வார்த்தைகளால் கோபங்கொண்டு நீ அமைதியை இழந்து தவிக்கிருய். இதை நினைத்துப் பார். ஒரு வாயில்காப்போனிடமிருந்து ஏற்பட்ட அவமரியாதையை ஸ்ரீராமகிருஷ்ணர் எவ்வளவு பொறுமையுடன் மனத்தாங்கல் சிறிதுமின்றி ஏற்றுக்கொண்டார்! இது நமக்கு ஒரு பாடமல்லவா?



சுவாமி பிரேமானந்தர்

மற்ற உலக மக்களைப் போல பிறரை அதிகாரம் செய்வதற்காகவா நாம் வந்திருக்கிறோம்? இதயத்தைப் பரிசுத்தமாக்கப் பயன்படாத பணியும் சேவையும் உபயோகமற்றவை. அப்படிப்பட்ட வேலை வீண் வேலை ஆகிறது. யார்தான் மற்ருெருவருக்கு நன்மையைச் செய்துவிட முடியும்? சுயநலமில்லாத சேவையின் மூலம், நாம் நமக்கேதான் நன்மை செய்து கொள்ளுகிறோம். நமது மனது பரிசுத்தமாகிறது; பொறுமையும் சகிப்புத்தன்மையும் நம்மிடம் வளர்கின்றன. வாழ்க்கையின் சிக்கலை நீக்கும் வழியில் அது என்ன சிறிய லாபமா?

நெற்களத்தில் நெல்லைத் தூற்றினுல் நெல் மட்டும் குவிந்து பதர் பறந்துபோகும். நீ அந்தமாதிரி உன் மனதில் உலகை ஆராய்ந்து நல்லதை வைத்துக் கொண்டு, பொல்லாததைப் பதர் போல காற்றில் போகும்படி விட்டுவிட வேண்டும். அப்படிச் செய்து பார்த்தால் உனக்கு மகிழ்ச்சி ஏற்படும்.

என்னை வெவ்வேறு நிலைகளில் வைத்து இராமகிருஷ்ணர் எனக்கு எத்தனை பாடங்களைக் கற்பிக்கிருர்? நான் ஸ்ரீராமகிருஷ்ண

ரிடம் சரண்புகுந்து கல்லூரிப் பரீட்சைகளில் இருந்து தப்பிவிட்டேன் என்று நினைத்தேன். ஆனால் இப்போது ஒவ்வொரு அடி வைக்கும் போதும் ஒரு பரீட்சை காத்திருப்பதைப் பார்க்கிறேன். என் படிப்பும் பரீட்சையும் முடியும் போது ஒரு வேளை அவர் என்னை விடுவிப்பார்.

நீ அந்த மடத்துக்குத் தலைவனாக இருந்த போதும் ஒரு ஏதலனைப் போல வாழ வேண்டும். மகராஜ் (சுவாமி பிரம்மானந்தர்) இந்த உண்மையை என் மனதில் ஆழப் பதிய வைத்திருக்கிறார். அதை நான் அடிக்கடி ஞாபகப் படுத்திக் கொள்ளுகிறேன்.

இந்த ஆசிரமத்தில் வந்து சேரும் சன்னியாசிகளையும் பிரம்மசாரிகளையும் நாங்கள் எங்கள் சகோதரர்களாகவும் குழந்தைகளாகவும் பாவிக்கிறோம். ஸ்ரீராமகிருஷ்ணர் அளவு கடந்த அன்பால் மகராஜ் அவர்களையும் பிறரையும் முற்றிலும் தமக்குச் சொந்தமானவர்களாக ஆக்கிக் கொண்டார். அதேமாதிரி அன்பால் மகராஜரும் பிறர் குழந்தைகளைத் தமது குழந்தைகளாக்கிக் கொண்டார். ஆகையால் இந்தக் குழந்தைகள் அவருடைய வார்த்தைக்குச் செவி சாய்த்து, அவர் எங்கே போகச் சொன்னாலும் போய்க் கடுமையாக உழைக்கிறார்கள். இதை எல்லாம் அவர்கள் செய்வது அன்பினாலேயே. சுவாமிஜி (விவேகானந்தர்) சொல்வார்: ''நீ பிறரை நல்ல வழியில் அழைத்துச் செல்ல விரும்பினால், அவர்களுக்குத் தலைவனாக விரும்பினால், பிறருடைய நன்மைக்காக நீ உன்னையே தியாகம் செய்ய வேண்டும்.'' வெறும் வாய்ப் பேச்சால் எதுவும் பயனில்லை. சுயநலமின்மைதான் கருமத்தின் இரகசியம். நீ ஒரு மனிதனை முழு அளவில் அன்புடன் நேசித்தால், அவன் உனக்காக உயிரையும்விடத் துணிவதை நீ காண்பாய்.

நான் உன்னுடைய கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு சகோதரர் தாரக் (சுவாமி சிவானந்தர்) அவர்களிடமும் படித்துப்பார்க்கக் கொடுத்தேன். அவர், ''பயனில் பற்றில்லாமல் செய்யும் பணியானது அவனுக்கும் இல்லை, வேறு எவருக்கும் இல்லை, அது இறைவனின் வழிபாடு என்பதை அவனுக்கு எழுது'' என்று என்னிடம் சொன்னார்.

முற்றிலும் ஆசையை ஒழித்துவிடுங்கள்; ஆனால் பணி செய்துகொண்டே இருங்கள். அப்போது நீங்கள் அனைவரும் மாசற்ற பக்தர்களாக என்றும் விளங்குவீர்கள். உங்களுக்கு அளவு கடந்த பொறுமையும், சகிப்புத்தன்மையும், மன்னிக்கும் மனப்பான்மையும் கொடுத்தருள வேண்டும் என்று நான் ஸ்ரீராமகிருஷ்ணரை வேண்டிக் கொள்ளுகிறேன். உண்மையைக் கடைப்பிடித்து உற்சாகத்துடன் மேலேறுங்கள். உங்களைப் பார்த்துப் பிற மனிதர்கள் பொறுமை, சகிப்புத்தன்மை, இரக்கம் முதலிய நல்ல குணங்களைக் கற்றுக்கொள்ளட்டும்; — மனிதர்கள் மட்டுமல்ல, வானுலகிலுள்ள தேவர்களும் கற்றுக்கொள்ளட்டும்.

ஸ்ரீராமகிருஷ்ணரைச் சரணடைந்து நீங்கள் புதியதொரு ஒளியைப் பெற்றிருக்கிறீர்கள். உங்களுடைய அதிசயத்தக்க வாழ்க்கையைப் பார்த்து மேலும் பலபேர் அந்த ஒளியைப் பெறுகிறார்கள். சொற்பொழிவுகளாலோ, அவருடைய உபதேச மொழிகளை மேற்கோள்களாகக் காட்டுவதாலோ நீங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரை உலகிற்கு விளக்கிவிட முடியாது. அவருடைய வார்ப்படத்தில் உங்கள் வாழ்க்கையை வார்த்துக்கொள்ளுங்கள். உலக மக்கள் உங்களுடைய முன்மாதிரியான வாழ்க்கைகளைப் பார்க்கட்டும்.

பாராட்டுதல்களாலோ, இகழ்ச்சியாலோ, ஆடாமல் அசையாமல் மற்றவர்களுடைய அபிப்பிராயங்களால் வழி பிசகாமல் இருங்கள். உங்கள் பார்வை எப்போதும் இராமகிருஷ்ணரையே நோக்கி இருக்கட்டும். அவர் நிச்சயமாக உங்களை கவனித்துக்கொள்வார். அனேகமாக எல்லோருமே மகா மாயையால் மயக்கப்பட்டு கண்ணிழந்தவர்களைப் போல இங்கு மங்கும் அலைகிறார்கள். நீங்கள் அஞ்ச வேண்டாம். பகவான் உங்களுடைய துணைவர், உங்களுடைய இரட்சகர்.

அற்ப நிகழ்ச்சிகளால் மனதில் கலவரமடைவது சுயநலமற்ற பணியாளர்களுக்கு ஏற்றதல்ல. நீங்கள் ஆன்மீக நாட்டம் உடையவர்கள், ஸ்ரீராமகிருஷ்ணருடைய நெருங்கிய அடியார்கள். மற்றவர்கள் உங்களைப் பற்றிச் சொல்வதைப் பொருட்படுத்த வேண்டாம்.

இந்த விவகாரிக உலகத்தில் நன்மையும் தீமையும், இன்பமும் துன்பமும், புகழ்ச்சியும் இகழ்ச்சியும், எந்தக் காலத்திலும் நிச்சயமாக இருந்துகொண்டே இருக்கும் என்பதை நன்றாக

தெரிந்து கொள்ளுங்கள். எங்களை நெருங்குபவர்களை நாங்கள் நேசிப்பது அவர்களுடைய குண தோஷங்களுக்காகவோ, அவர்கள் நல்லவர்கள் -கெட்டவர்கள் என்பதற்காகவோ அன்று; அன்பு செலுத்துவதே எங்களுடைய இயல்பு; அவர்கள் எப்படி இருந்தாலும் அவர்களை எங்களுக்கு முழுவதும் சொந்தமாகக் கருதுகிறோம்.

நீ வாராணசிக்குப் போகிறாய் என்பது நல்லது. அங்கே மகாத்மாக்களின் கூட்டுறவு உனக்குக் கிடைக்கும். ஆத்மானந்தமாகிய கடவுளை முழு உள்ளத்துடன் போற்று. அவர் உனக்கு சிறந்த மனநிலையை அருள்வார். ''ஆண்டவனே! நான் அன்று, நான் அன்று, நீயேதான்'' என்ற இந்த பாவனையைப் பழகிவா. ''நான் அன்று, நான் அன்று, நீயேதான், ஆண்டவனே!'' என்று மீண்டும் மீண்டும் சொல்லிக்கொள். ''ஆண்டவனே! நான் எப்பட்டவனாகயிருந்தாலும், நான் இருக்கிறபடி என்னை நீ ஏற்றுக்கொள்ளவே வேண்டும். எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? இறைவா! எனக்கு நீ உண்டு, உனக்கு நான் உண்டு.''— என்னும் இந்த உறவை அழிக்க முடியாது, இது என்றென்றைக்குமாக உள்ளது என்பதை அறிவாயாக.



வேதவாக்கு:

# பரம்பொருளின் பாவனைகள்

'அண்ணா' சுப்ரமண்யம்

[சென்ற இதழின் தொடர்ச்சி]

அக்னிதேவன், இதுவரை இருந்ததையும் இனிவரப் போவதையும் நேசிப்பவன்; தன்னுடைய பிரியத்திற்கு உகந்த வடிவங்களில் உலகின் உத்தமத் தனி நாயகனாக விளங்குகிறான்.

—சாம. 17.10

—அத. 6.36.3.

உன்னத உலக நாயகனான வருணதேவனை நான் வெகுதூரம் பரவக்கூடிய இனிய கவிதையால் போற்றுகிறேன். அவன் பராக்கிரமம் மிக்கவன், என்றென்றும் உலகை ஆள்பவன், தனது பெருமையாலும் சக்தியாலும் இரண்டு உலகங்களையும் தீபம் போன்ற ஒளியால் பிரகாசிக்கச் செய்பவன்.

—ரிக். 6.68.9.

அழியாத இனிமையுடனும், புனிதமான ஆனந்தத்துடனும் நிறைந்த மூவுலகங்களும் எந்த விஷ்ணுவினுடையவையோ, அவனை நோக்கி எங்கள் துதி பரவட்டும். விஷ்ணுதான் பிராணிகள் வாழும் உலகையும் வானுலகையும் மேலுலகையும் மூன்றையும் தாங்குபவன்.

தேவலோக நாயகனாகிய அவனைநாடி எல்லோரும் கூடி வாருங்கள். அவன்தான் மக்கள் சமூகத்தின் உச்சியில் விளங்குபவன். பழைமையான அவன் புதுமையை நாடுகிறான். எல்லா வழிகளும் அவனை நோக்கியே செல்லுகின்றன. அவனே ஒன்றாகிய பரம்பொருள்.

—ரிக். 1.154.4

—சாம. 372. அத. 7.21.1

நம்மைக் காக்க அதிதியை அழைக்கிறோம். அவள் நியாய வழியில் நடப்பவர்களின் பராசக்தியாகிய அன்னை. உலகை ஒழுங்காக நடத்தும் ராணி. சக்திமிக்க அரசி; அழிவே இல்லாமல், மேன்மேலும் வளரும் நல்ல ரட்சகி; கருணைமிக்க வழிகாட்டி.

—யஜுர் 21.4.

ஆதியில் சிருஷ்டியின் ஒரே நாயகனாக மகிமையுடன் விளங்கியவன். ஹிரண்யகர்ப்பன் அவன். பூவுலகையும் மேலுலகையும் தாங்கு பவனானன்

—ரிக்.10.121.1; யஜுர்25.10

—அதர்—4.2.7.

வருணன் ஊடும் பரவும்போல் எங்கும் வியாபித்திருப்பன். வருணன் நமது நாட்டில் உள்ளவன், பிற நாட்டிலும் உள்ளவன். வருணன் தேவனாகவும் இருக்கிறான், மனிதனாகவும் இருக்கிறான்.

—அதர். 4.16.8



# எங்கே இருக்கிறான்?

வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன்

ஆண்டவன் எங்கே இருக்கிறான்? இப்படிக் கேட்பதைவிட, 'அவன் எங்கே இல்லை?' என்று கேட்பது எளிது. அவன் இல்லாத இடமே இல்லை. அவன் சர்வ வியாபகன்; சர்வாந்தர் யாமி. அதாவது எல்லாவற்றுக்கும் உள்ளும் இருக்கிறான், எல்லாவற்றினூடும் இருக்கிறான். அவனுக்குத் தமிழில் **கடவுள்** என்ற பெயர் அமைந்திருக்கிறது; அவன் எல்லாவற்றையும் கடந்து, எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் கொண்டு, அவற்றுக்கு அப்பாலும் இருக்கிறான். இது அவனுடைய சர்வ வியாபக நிலை; எல்லாம் இல்லாத இடத்தில், தத்துவங்களுக்கெல்லாம் அதீதனாக இருக்கிறான். அதேசமயத்தில் அவன் அணுவுக்கு அணுவாய், நுண்ணிய பொருள் களினூடும் மிகநுண்ணிய பொருளாயும் இருக் கிறான்.

''நுண்ணியான், மிகப்பெரியான்''

என்று **ஞானசம்பந்தர்** பாடுவார். இந்தக் கடவுள் தத்துவத்தை நற்றிணை என்னும் சங்க நூலில் உள்ள கடவுள் வாழ்த்துச் சொல்லுகின்றது.

''இயன்ற எல்லாம் பயின்று, அகத்தடக்கிய
வேத முதல்வன் என்ப''

என்பது இந்த உண்மையைப் புலப்படுத்தும் அடிகள். 'இயன்ற எல்லாம் பயின்று' என்பது அவனுடைய சர்வாந்தர்யாமித்துவத்தையும், 'அகத்து அடக்கிய' என்பது அவனுடைய சர்வ வியாபகத்தையும் குறிப்பிடுகின்றன. அவன் எங்கும் பரந்திருக்கிறான்.

ஔவைப் பாட்டி நெடுந்தூரம் நடந்து வந்த கால்வலியோடு ஒரு கோயிலுக்குள் புகுந்து, ''அப்பாடி!'' என்று உட்கார்ந்து காலை நீட்டிக் கொண்டாள். இறைவன் எழுந்தருளியிருக்கும் சந்நிதிக்கு எதிரே அந்த மூர்த்தியை நோக்கிக் காலை நீட்டிக் கொண்டிருந்தாள். அதை ஒரு பையன் பார்த்தான். ''பாட்டி, பாட்டி, அங்கே சுவாமி இருக்கிறார்'' என்று அவளிடம் படபடப்பாகக் கூறினான். பாட்டி சிரித்துக் கொண்டே, ''அப்படியா? தெரியாமல் நீட்டி விட்டேன். காலைத் திடீரென்று மடக்க முடி யாது. தயவுசெய்து சுவாமி இல்லாத இட மாகப் பார்த்து என் காலைத் திருப்பிவிடு, அப்பா!'' என்றாள். அந்தப் பையன் அறிவுள்ள வன். ''சுவாமி இல்லாத இடமா!'' என்று அப்படியே யோசனையில் ஆழ்ந்து விட்டான். சுவாமி இல்லாத இடம் ஏது?

இந்த உண்மை அநேகமாக எல்லாருக்கும் தெரியும். ஆனால் எங்கும் இருக்கிற அந்தக் கடவுளை நம்மால் பார்க்க முடிகிறதா? காற்று



எங்கும் இருக்கிறது. அதை நம் கண்ணால் காண முடிவதில்லை. ஆனாலும் அதன் ஸ்பரிசத் தினால் அதை நாம் உணர முடிகிறது. அப்படி ஏதாவது ஒரு வகையில் கடவுள் எங்கும் இருப் பதை உணர முடிகிறதா? இல்லையே!

எல்லாவற்றையும் உண்டாக்கிப் பாதுகாக் கும் பிரான் அவன். **பிரான்** என்ற சொல்லுக்கு உபகாரி என்று பெயர். அவனைவிடப் பெரிய உபகாரி யார் இருக்கிறார்கள்? வள்ளல்களுக் கெல்லாம் பெரிய வள்ளல் அவர். மாயூரத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு வள்ளல் என்றே ஒரு பெயர் உண்டு. அதை வடமொழி யில் 'வதான்யேசுவரர் என்பார்கள். அந்த வள்ளலை, பிரானை, நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா? நமக்கு வேற்றூரிலிருந்து ஒருவர் நம்மிடம் உள்ள அன்பினால் நமக்கு வேண்டிய நெல்லை அனுப்பி வைக்கிறார்; சில சமயங்களில் பணங்கூட அனுப்புகிறார். அந்த உபகாரியினால் நலம் பெறும் நாம், அவரைக் காண வேண்டும், கண்டு நன்றியுரை சொல்லவேண்டுமென்று நினைப்போம்; எப்படியாவது அவரைக் கண்டு பணிய வேண்டும் என்று நம் உள்ளம் துடிக்கும்.

ஆனால் தனுகரணபுவன போகங்களை நமக்கு உதவி வரும் இறைவனைக் காண வேண்டும் என்ற எண்ணம் எழுவதில்லை. அவனைக் காண முடியாது என்று யாராவது சொன்னால்,

அதையே வியாஜமாக வைத்துக்கொண்டு சும்மா இருந்து விடுகிறோம். இது நியாயமா? முறையா?

எல்லாரும் அப்படி இருப்பதில்லை. சில பேராவது அந்தப் பரோபகாரியை எப்படி யாவது தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவாவுகிறார்கள்; பேரார்வம் கொள்கிறார்கள். "அத்தா, காண ஆசைப்பட்டேன் கண்டாய், அம்மானே!" என்று கூறும் **மணிவாசகரைப்** போலத் துடிக்கிறார்கள். அவர்களைத்தான் பக்தர்கள் என்று சொல்கிறோம்.

உலகில் உள்ள பொருள்களுக்காக ஆசைப் பட்டு, அவற்றை அடைய முயன்று, அவற்றுக் காக அல்லற்பட்டு வாழ்நாளை வீணாக்குகிறவர் களே அதிகம். அவர்கள் செல்லும் மார்க்கம், அவர்கள் உழைத்து முன்னேறுவதாக எண் ணும் நெறி, சிறு நெறிச் சிறிய லாபத்தை, இன்றிருந்து நாளை அழியும் பொருளை, அடைய நடைபோடும் நெறி. அந்தச் சிறு நெறியில் செல்லச் செல்ல மேலும் மேலும் ஆசை விரி யுமேயன்றிச் சுருங்காது. அந்த ஆசையால் மயக்கம் ஏற்படும்; ஆதலால் அது மருள் நெறி. நாம் செல்ல வேண்டிய நெறி அன்று அது; அது நெறியல்லாத நெறி. அந்த நெறியைக் கடைப் பிடித்து ஒழுகிறவர்களுக்கு உய்வு இல்லை. பிறப்பு இறப்புகளில் புகுந்து புகுந்து தடுமாற வேண்டியதுதான். அப்படியின்றி இறைவனை உணர்ந்து அவன் அருளைச் சேர எண்ண வேண் டும். **திருவாசகம்** இதைச் சொல்கிறது.

"நெறியல்லா நெறிதன்னை நெறியாக
நினைவேனைச்
**சிறுநெறிகள்** சேராமே திருவருளே
சேரும் வண்ணம்"

என்பது ஒரு பாசுரம். பெரும்பாலான மக்கள் செல்லும் நெறி, நெறியல்லா நெறி; சிறு நெறி; அதனால் வரும் பயன் சிறு பயன். அன்பர்கள் சிறு நெறியில் செல்வதை வெறுப்பார்கள். பெரு நெறியையே பேணுவார்கள்.

"பெருநெறி பிடித்து ஒழுக வேண்டும்"

என்பது **இராமலிங்க வள்ளலார்** வாக்கு. இறைவன் அடிபணிந்து வழிபடும் அப்பெரு நெறியையே வேண்டுவார்கள் மெய்யன்பர்கள்.

"நாயி னேன்உனை நினையவும் மாட்டேன்
நமச்சி வாய என்று உன்அடி பணியாப்
பேய னாகிலும் பெருநெறி காட்டாய்"

என்று **மாணிக்கவாசகர்** வேண்டுகின்றார்.

அன்பர்கள் இந்த ஜீவயாத்திரையில் இறை வனை அடைவதையே லட்சியமாகக் கொண்ட பெரு நெறியைப் பற்றி ஒழுகுவார்கள்; அந்த நெறியிற் செல்வதற்கு மாறாக எதையும் செய்ய மாட்டார்கள்; அந்தப் பெரு நெறிப் பயணத்தையே கண்ணும் கருத்துமாகப் பேணு வார்கள்.

அத்தகைய அன்பர்கள் சிலர் காரைக்கால் அம்மையாரை அணுகுகிறார்கள். அவர்கள் பரோபகாரியாகிய எம்பிரானை நோக்கும் பேராவலால் உந்தப்பட்டு, அவன் அருளுக் காக ஏங்கும் பெரு நெறியைப் பேணுகிறவர் கள்.

**பிரான் அவனை நோக்கும் பெருநெறியே பேணி.**

சிறுநெறிகளைச் சேராமல், மேலும் மேலும் பெரு நெறியில் முன்னேறிச் செல்வதுதான் பேணுதல்; தாம் கொண்ட கடைப்பிடியை விடாமல் பற்றித் தளர்வடையாமல் திண்மை யோடிருப்பதையே பேணுதல் என்று சொல்ல வேண்டும். அந்த அன்பர்கள் அத்தகையவர்கள்.

அவர்கள் இன்னும் அவனை அடையவில்லை. அவன் நெடுந்தூரத்தில் இருக்கிறான். இவன் என்று சுட்டிகாட்ட முடியாத சேய்மையில் 'அவனா'கவே இருக்கிறான். எவ்வளவு சேய்மை யிலிருந்தாலும் அவன் செய்யும் உபகாரம் நம்மை வந்து அடைகிறது. அவன் நாம் பெற் றுள்ளவற்றையெல்லாம் தந்த பிரான். ஆனால் தன்னைப் பெறும் பாக்கியத்தை அவன் அருள வில்லை. இன்னும் சேய்மையில் அவனாக இருக் கிறான்.

என்றாலும் அவனை அடைய வேண்டும், நோக்க வேண்டும் என்ற ஆர்வம் தணியவில்லை; ஒருகாலுக்கு ஒருகால் வளர்ந்துகொண்டே வருகிறது. அதனால் அந்தப் பெருநெறியினின்று அகலாமல், அதுவே தம் குறிக்கோளை அடை வதற்குரிய உபாயமென்று அன்பர்கள் சென்று கொண்டே இருக்கிறார்கள்; 'பிரான் அவன் தன் பெரு நெறியையே பேணுகி'றவர்களாக இருக்கிறார்கள்.

அன்பு என்பது தொடர்புடையவரிடம் செல் லும் உணர்வு. உலகத்தில் அன்புடையவர்கள் அதிகமாக இருப்பதில்லை; அருளுடையவரோ மிகச் சிலர். அவர்களுடைய உலக மக்களை சார்ந் தவர்களாதலின் அவர்களுடைய அருளுக்கும் எல்லை உண்டு. அவர்களுடைய செல்வம்,

கல்வி, ஆற்றல் ஆகியவற்றை அவர்கள் இன்னார் இனியார் என்று பாராமல் யாவருக்கும் வழங்குகிறார்கள். அது மிகமிகச் சிறந்த பண்பு. என்றாலும் அவர்கள் படைத்த செல்வம் முதலியன ஒரு வரையறைக்கு உட்பட்டது. அதனால் அவர்கள் அருளால் பயன் பெறும் பரப்பும் எல்லைக்குள் அகப்பட்டதாகவே இருக்கும்.

எல்லையிறந்த ஆற்றலும் பண்புகளும் உடைய ஒருவன் செய்யும் அருள்தான் எல்லையில்லாத அருளாக, பேரருளாக, இருக்கும். பெரிய வள்ளலாகிய ஆண்டவன்தான் அத்தகைய நிலையில் உள்ளவன். ஆகவே அவன் கூட்டும் அருள்தான் பேரருள்; அவன் பேரருளாளன்.

''பிணிகெட நல்கும் பெருந்துறைஎம்
**பேரருளாளன்**''

என்று **மணிவாசகப்பெருமான்** பாடுவார்.

''நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கியவாறு
அன்றேஉன் **பேரருளே**''

என்று அவன் செய்யும் பேரருளை நினைந்து உருகுவார்.

பெரிய உபகாரியாகிய இறைவனை நோக்கிச் செல்லும் நெறி பெரு நெறி; அந்த நெறியைப் பேணி நடைபோடும் அன்பர்கள் சிறிய அருளையா வேண்டுவார்கள்? அவர்கள் அவனுடைய பேரருளையே வேண்டி நிற்பார்கள்.

**பிரான் அவன்றன் பேரருளே வேண்டி.**

பிரானை நோக்கும் பெரு நெறியில் படரும் வாழ்க்கையும், அவனுடைய பேரருளையே வேண்டி நிற்கும் ஆர்வமும் உடைய அன்பர்கள் இப்போது ஒருவகை ஏக்கத்தை அடைகிறார்கள். 'இந்தப் பெரு நெறி முடியாத நீள் நெறியாக இருக்கிறதே! அவன் பேரருளைப் பெற அவனை அடைய வேண்டுமே! அவன் இன்னும் எவ்வளவு தூரத்தில் இருக்கிறான்? அவனை எங்கே காணுவது? அவன் எங்கே இருக்கிறான்? எங்கும் இருந்தாலும் நாம் காணும் வகையில் எங்கே இருக்கிறான்?' என்ற ஏக்கம் வருகிறது. 'பிரான் அவன் எங்குற்றான், எங்குற்றான்?' என்ற கேள்வி அவர்கள் உள்ளத்தே அலை மோதுகிறது. 'எந்தத் தலத்தில் அவனைக் காணலாம்? எந்த மலை முகட்டில் நாமும் காணும் வகையில் அவன் எழுந்தருளியிருக்கிறான்? அவனைக் காணுவது எங்கே, எங்கே?' என்று அவர்கள் உள்ளத்தில் கேள்வி எழுந்து எதிரொலித்து ஒரே கேள்வி மயமாகப் பரவுகிறது.



'இந்தப் பெரு நெறியில் சென்று பிரான் அவனை உணர்ந்தவர்களை அணுகிக் கேட்கலாமா? இப்படியே போய்க் கொண்டிருக்கும் பயணத்துக்கு முடிவு எங்கே? தக்கவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்' என்ற முடிவுக்கு அன்பர்கள் வருகிறார்கள். அப்போது அவர்களுக்குக் காரைக்காலம்மையாருடைய நினைவு வருகிறது. அவரைக் காட்டிலும் சிறந்த வழிகாட்டி கிடைப்பதருமை என்று எண்ணி அவரை அணுகுகிறார்கள். ''எம்பெருமான் எங்கே இருக்கிறான்? அவனைக் கண்டு அவன் பேரருளைப் பெற வேண்டும்'' என்று பணிந்து வேண்டுகிறார்கள்.

காரைக்காலம்மையார் அவர்களை ஏறெடுத்து நோக்குகிறார். அவர்களுடைய உண்மையான ஆர்வம் அவருக்குத் தெரிகிறது. அவர்கள், 'பிரான் அவனை நோக்கும் பெரு நெறியே பேணி, பிரான் அவன்றன் பேரருளையே வேண்டி' நிற்கிறவர்கள் என்பதைத் தெள்ளத் தெளிவாக அறிந்து கொள்கிறார். இப்போது பிரான் அவனை, 'எங்குற்றான்?' என்று அவர்கள் கேட்கிறார்கள்.

''நீங்கள் எங்கே தேடினீர்கள்?'' என்று வினவுகிறார் அம்மையார்.

''எங்கெங்கோ தேடினோம். தேடின இடங்களுக்குக் கணக்கில்லை. எங்கும் அவன் இருந்தாலும் நாங்கள் நோக்கும் வகையில் அகப்படவில்லை. தாங்கள் அவனை நோக்கிப் பேரருளைப் பெற்றவர்களாயிற்றே! ஆதலால் தங்களை அணுகி வந்தோம். அவன் எங்கே இருக்கிறான்? சொல்லியருளுங்கள்..''

அம்மையார் புன்னகை பூக்கிறார். அருளுடன் அவர்களைப் பார்க்கிறார்.

**''பிரான் அவனை நோக்கும் பெருநெறியே பேணிப்
பிரான் அவன்றன் பேரருளே வேண்டிப் - பிரான்
அவனை எங்குற்றான் என்பீர்கள்**

அல்லவா?'' என்று மறுபடியும் கேட்கிறார். அவர்கள், ''ஆம்! ஆம்!'' என்று தங்கள் பேரார்வம் தோன்றச் சொல்கிறார்கள்.

''அவன், அந்தப் பிரான், இங்கே இருக்கிறுன்!''

அதைக்கேட்டு அன்பர்களுக்கு வியப்பாக இருக்கிறது. 'இங்கேயா? இங்கே என்ருல் மிகவும் அருகில் என்றல்லவா பொருள் கொள்ளும்படி இருக்கிறது? சமீபத்தில் இருப்பதாக அல்லவா சொல்கிருர்? அந்த 'இங்கே' என்பது எந்த இடம்?' என்று அவர்கள் எண்ணம் ஓடுகிறது. அவர்களுடைய ஆவல் கரையை உடைத்துக் கொண்டு பாயும் வெள்ளத்தைப் போல பெருகுகிறது.

''இங்கேயா? எங்கே? இங்கே என்று எதைச் சுட்டுகிறீர்கள்?''

அம்மையார் புன்னகை பூத்துக் கொண்டே, ''இங்கேதான்'' என்று தம் இதயத்தின் மேல் கைவைத்துச் சுட்டிக் காட்டுகிருர். கேட்ட அன்பர்கள் ஒன்றும் தெரியாமல் விழிக்கிருர்கள்.

''ஆம் இங்கேதான். ஒன்றுக்கும் பற்ருத என் சிந்தையில் இருக்கிருன்; என்னைப் போன்றவர்கள் சிந்தையிலும் இருக்கிருன். வேறு எவ்வளவோ இடங்களில் இருக்கிருன். அதைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. அவன் இந்த இடத்திலேயே, இங்கேயே, என்னைப் போன்றவர்களின் சிந்தையிலும் இருக்கிருன். இங்கே அவனைக் காணலாம்; நோக்கலாம்; பேரருளைப் பெறலாம்.''

**என்போல்வார் சிந்தையினும் இங்குற்ருன்.**

அம்மையாருடைய நல்லுரையைக் கேட்ட அவர்களுக்குத் தெளிவு பிறக்கிறது. 'வெளியிலே தேடப் புறப்பட்டால் போய்க் கொண்டேதான் இருக்க வேண்டும். உண்முகமாக உங்கள் நோக்கத்தைத் திருப்புங்கள். அங்கே காணலாம்' என்று அம்மையார் குறிப்பதைத் தெரிந்து கொள்கிருர்கள்.

'அப்படி உண்முக நோக்கம் எளிதிற் கிடைக்குமா?' என்ற சந்தேகம் அவர்களுக்கு உண்டாகிறது. அதை அம்மையார் ஊகித்துக் கொள்கிருர்.

''காண வேண்டும் என்ற ஏக்கமும் இடைவிடாத முயற்சியும் பேரன்பும் உடையவர்களாக இருப்பவர்கள் மற்ற இடங்களில் தேட வேண்டாம். உள்ளே தேடிஞல் எளிதாகக் காணலாம். அப்படிக் காண்பாருக்கு அவன் காட்சி எளிதாகக் கிடைக்கும்'' என்று விளக்குகிருர் அம்மையார்.

**காண்பார்க்கு எளிது.**

உள்ளே நோக்கும் காட்சி முறுகிய அன்பர்களுக்கு எளிது என்கிருர். அப்பர் சுவாமிகளும், 'வெளியிலே தேடிய திருமாலுக்கும் நான்முகனுக்கும் அறிய ஒண்ணுத இறைவனை நான் உள்ளே தேடிக் கண்டுகொண்டேன்!' என்றல்லவா சொல்கிருர்?

> ''திருமாலொடு நான்முகனும்
> தேடியும் தோடாணுத் தேவனை **என்னுளே**
> **தேடிக் கண்டு கொண்டேன்.**''

ஆகவே, பெரு நெறியைப் பேணிப் பிரானுடைய பேரருளை வேண்டி நிற்பவர்கள், புறநோக்கைவிட்டு அகநோக்கை மேற்கொண்டு, புறப்பயணத்தை விட்டு அகப்பயணத்தை மேற்கொண்டால், அவனைக் காணும் காட்சி எளிதாகும் என்று அம்மையார் உபதேசம் செய்கிருர். அது ஒரு பாட்டு வடிவாக மலர்கிறது.

> **பிரான் அவனை நோக்கும் பெருநெறியே பேணிப்**
> **பிரான் அவன்றன் பேரருளே வேண்டிப்— பிரான் அவனை**
> **எங்குற்ருன் என்பீர்கள்; என்போல்வார் சிந்தையினும்**
> **இங்குற்ருன்; காண்பார்க்கு எளிது.**

[பரம உபகாரியாகிய ஆண்டவனை நோக்கி ஒழுகும் பெரு நெறியைக் கடைப்பிடித்து, பிராஞகிய அவனுடைய பேரருளைப் பெறுவதே லட்சியமாக அதனை விரும்பி, அந்தப் பிரானை 'எங்கே இருக்கிருன்?' என்று கேட்கிறீர்கள்; அவன் இங்கே, என் போல்வார் உள்ளத்திலும் இருக்கிருன். ஆர்வத்தோடு உள்ளே காணுபவர்களுக்கு அவனுடைய காட்சி எளிதாக அமையும்.

பிரான்-உபகாரி. அவன் என்றது இறைவனைக் குறித்தது, 'அவனன்றி ஓரணுவும் அசையாது, என்ற பழமொழியில் சுட்டுச் சொல்லாக இருந்தாலும் இறைவன் என்ற பொருளையே உணர்த்தல் காண்க. பெருநெறியே ஏகாரம், பிரிநிலை; வேறு நெறியில் செல்லாமல் என்ற குறிப்பை உடையது. பேணி-தளர்ச்சியின்றிக் கடைப்பிடித்து. பேரருளே: ஏகாரம், பிரிநிலை; மற்றவர் அருளை விரும்பா

மல் என்ற கருத்தை உடையது. அவனைப்பற்றி இவ்வாறு கேட்பீர்கள். பிரான் அவனே என்பது அம்மையார் கூற்று; எங்குற்றான் என்பது அன்பர்கள் கேள்வியைக் கொண்டு கூறியது. இங்கு, என்போல்வார் சிந்தையினும் என்று அந் வயித்துப் பொருள் கொள்க. சிந்தையினும் என்ற உம்மை, எச்ச உம்மை, எங்கும் இருப்பதையும் எண்ணச் செய்தது. காண்பார்க்குக் காட்சி எளிது என்று ஒரு சொல் வருவித்து முடிக்க வேண்டும். அவன் எளிது என்றால் திணைவழுவாகிவிடும்.]

உண்முக நோக்கத்தால் இறைவனைக் காணலாம் என்பது கருத்து.

''வானத்தான் என்பாரும் என்க;மற்
றும்பர்கோன்
தானத்தான் என்பாரும் தாம்என்க;—
ஞானத்தான்,
முன்நஞ்சத் தால்இருண்ட மொய்
ஒளிசேர் கண்டத்தான்,
என்நெஞ்சத் தான்என்பன் யான்'' (6)

என்று முன்பும் இக்கருத்தை வேறு வகையாக அம்மையார் சொல்லியிருக்கிறார்.

அற்புதத் திருவந்தாதியில் 45-ஆவது பாடல் இது.





# தியான வேளையிலே....

எப். ஜே. அலெக்ஸாண்டர்

(சுவாமி விவேகானந்தரின் மேலை நாட்டுச் சீடர்)

சமயம் வருகிறது. பகல் மாலையில் மறைகிறது. சுற்றுப்புறம் எங்கும் ஆழ்ந்த நிசப்தம் குடிகொள்கிறது. இயற்கை அன்னையே சாந்தத்தில் திளைத்துக் கொண்டிருக்கிறாள்.

இவ்விதம் இயற்கை, சாந்தத்தில் நிலைத்திருக்கும்போது, மிகவும் உற்சாகத்தோடு இதயக் குகையிலே ஆன்மா ஆர்ப்பாட்டம் இல்லாமல் மிகச் சர்ந்தமாகப் பிரவேசித்து ஒதுங்குகிறது.

புலன்களும் அவைகளின் வியாபாரங்களும் ஒடுங்கட்டும். வாழ்க்கையோ இப்போது உள்ள விவகார நிலையில் குறுகியது. ஆசையோ கொழுப்பெடுத்துத் துள்ளுகிறது. கடவுளுக்காகக் கொஞ்ச நேரமாவது உனது காலத்தை ஒதுக்கிவை. அவர் கேட்பதெல்லாம் கொஞ்சம்தான்; உனது ஆன்மாவை நீ அறிந்து கொள்ள வேண்டும்; அவ்வளவே. ஏனென்றால் நீ உனது ஆன்மாவை அறிந்தால் கடவுளையும் அறிந்து கொள்வாய். கடவுளும் ஆன்மாவும் ஒன்றே!

'ஓ மனிதனே, நீ தூசிக்குச் சமானம் என்பதை ஞாபகத்தில் வை!' என்று சிலர் சொல்கிறார்கள். இது, உடல் சம்பந்தப்பட்டவரையில் உண்மைதான்! மனதைப் பற்றியும்கூட இந்தக் கருத்து உண்மைதான்! ஆனால் இதைவிட உயர்ந்ததும், வலிமை பொருந்தியதும், உண்மையானதும், புனிதமானதுமாகிய வேதங்களோ, 'ஓ மனிதனே! நீ ஆன்மா என்பதை ஞாபகத்தில் வை' என்றுதான் சொல்கின்றன.

'ஓ ஆன்மா, நீ அழிவும் மாறுதலும் இல்லாத சாசுவதப் பொருள்' என்றுதான் கடவுள் கூறுகிறார். மற்றவைகள் அனைத்தும் மாறுதல் அடைகின்றன; தேய்கின்றன. ஓர் உருவம் எவ்வளவுதான் மகத்தானதாக இருந்தாலும் கூட, அதுவும் அழிகிறது. மரணமும் மாறுதலும் உருவங்களின் இயல்பாகும். எண்ணம் மாறுதலுக்கு அடங்கி இருக்கிறது. 'தான்' என்னும் தனித்தன்மை எண்ணம், உருவம் இவைகளைக் கொண்டுதான் பின்னப்பட்டிருக்கிறது. ஆகவே, ஓ ஆன்மா, நீ தனித்து நிற்பாயாக! எண்ணம், உருவம் ஆகியவைகளுக்கு அப்பாற்பட்டவன் நீ. சுத்த ஆன்மா நீ என்பதை ஞாபகத்தில் இருத்து! நீதிநெறி, சன்மார்க்கம் எல்லாம் இந்த உணர்வில்தான் குடிகொண்டிருக்கின்றன. 'நீயும் கடவுளும் ஒன்றே' — இதில்தான் உன் அழிவற்ற தன்மை அடங்கியுள்ளது. இதிலேயேதான் நீ பரிசுத்தனாகவும் புனிதனாகவும் இருக்கிறாய்.

எஜமானன் ஆவதற்கு முயற்சி செய்யாதே. ஏற்கனவே நீ எஜமானனுகவே இருக்கிருய். இனிமேல் ஒன்ருக மாறுவது என்பது உனக் கில்லை. ஓ ஆன்மா, நீ முக்காலத்திலும் இருக் கிருய்! மற்ருென்ருகப் பரிணமித்தல் என்பது என்னதான் சிறப்பும் காம்பீர்யமும் உடைய தாக இருந்தபோதிலும், 'இலௌகிக வளர்ச்சி என்பது காலத்திற்கு உட்பட்டது'. ஆனல் 'காலத்தைக் கடந்த ஒன்றில்தான் பரிபூரணத் துவம் உள்ளது' என்பதை நீ அறிந்துகொள் ளும் நேரமும் வரும். நீயோ காலத்துக்கு உட்பட்டவன் அல்ல; காலத்தைக் கடந்த எல்லையற்ற பொருளே நீ.

தெய்வத்தன்மை இருக்கிறதா என்ரு கேட் கிருய்! 'தத்துவம் அஸி!' நீ அது ஆகிருய்! நீ அது ஆகிருய்! உன் உள்ளே இருக்கும் உயர்வற உயர்ந்த ஓர் பொருளை அறிந்துகொள். அந்த உயர்ந்த பொருளையே வழிபடு! அந்த வழி பாட்டின் மிகச் சிறந்தமுறை, நீயும் அவ்வுயர் பொருளும் ஒன்றே என்பதை அறிந்துகொள் வதே ஆகும். அந்த உயர்ந்த பொருள் எது? அதைத்தான் நீ கடவுள் என்று கூறுகிருய்.

கனவுகளை எல்லாம் தூக்கி மறதிக் குழியிலே வீசி எறிந்துவிடு! உன் உள்ளே உறையும் ஆன் மாவைப் பற்றிக் கேள்விப்பட்ட பிறகு, நீ அதுவே ஆகிருய் என்பதை அறிந்துகொள்! அறிந்த பிறகு உணர்ந்துகொள்! சாட்சாத் காரத்தின்மூலம் அனுபவத்துக்குக்கொண்டுவா. அனுபவம் கைவந்த பிறகு 'தத்துவம் அஸி' – நீ அதுவே ஆகிவிடுகிருய்.

ஆர்ப்பாட்டம் நிறைந்த இலௌகிக உலகில் இருந்து நீ விலகிவிடு. இந்த உலகம் உண்மை இல்லாததாகிய கனவுகளின் மயமாக விளங்கு வது. உலகமும் உடலும்தான் கனவுகளின் நிலைக்களனுகிய கூடுகள். நீ கனவு காண்பவனுக இருப்பதா என்ன! கனவுகளின் தளைகளில் நீ என்றென்றும் கட்டுண்டிருப்பதா என்ன! 'எழுமின்! விழிமின்! நீ சேர வேண்டிய இலட் சியத்தை அடையும் வரையிலும் நில்லாது செல்!'

இப்படித்தான் கடவுள் நிசப்தத்தில் கூறு கிருர் – ஆழ்ந்த மிகமிக ஆழ்ந்த, வேறென்றும் புலனுகாத நிசப்தத்தில், அவருடைய குரல் ஒன்று மட்டுமே கேட்கக்கூடிய நிசப்தத்திலே கடவுள் அவ்விதம் கூறுகிருர்!

ஹரி ஓம் தத்ஸத்! 'அமைதிக்குள் செல் வாயாக! எல்லாவற்றையும் கடந்து செல் வாயாக!' எல்லாவற்றுக்கும் அப்பாலும், ஏன், உருவத் தோற்றங்களுக்கு உள்ளேயும் கூட சுத்தான்மா ஆட்சி செலுத்துகிறது. அதன் இயல்பு சாந்தம், சாந்தம், இன்னதென்று விளக்க முடியாத சாந்தம்!



ஒவ்வொருவரும் பிழை செய்யக் கூடியவரே. ஆனல் மூடர்களைத் தவிர வேறு யாரும் பிழையை விடாமல் பிடித்துக்கொள்ள மாட்டார்கள்.

—சிஸரோ

மீன் மாமிசத்தை உண்பவர்களும், மதுபானம் செய்கிறவர்களும், அவர்களது தாய், தந்தையருடன் நரகத்தை அடைவார்கள்.

—கபீர்தாசர்

தேவி! உனது பாதங்களை அடைக்கலமாக அடையும் மனிதன் எந்தவித ஆபத்துக்கும் உட்படுவதில்லை. ஆனல், தானே பிறருக்கோர் அடைக்கப் பொருளாகவும்கூட ஆகிவிடுகிருன்.

—தேவி மாகாத்மியம்

ஒரே விஷயமானது, மனதில் ஒரு சமயத்தில் சுகமாகவும் மற்ருெரு சமயத்தில் துக்கமாக வும் கொள்கிறது. ஒருவனுக்குச் சுகமாயிருப்பது மற்ருெருவனுக்கு துக்கமாயிருக்கிறது. ஆகை யால் சுகமும் துக்கமும் விஷயத்தில் இல்லை. மனதில்தான் உள்ளது. ஆத்மா எப்போதும் ஆனந்த மாயுள்ளது.

—விவேக சூடாமணி





# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

## 1977 நவம்பர் மாத நிகழ்ச்சிகள்

*15-11-77 ஆம் நாள் செவ்வாய்க் கிழமை இரவு 7 மணிக்கு, ஸ்ரீமத் சுவாமி ரங்கநாதானந்தர் அவர்கள்* **'பகவத்கீதையில் தியான யோகம்'** *என்னும் தலைப்பில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.*

**இந்திய தத்துவஞானம் தொடர் சொற்பொழிவு:**

| | |
|---|---|
| | **சாங்கிய தர்சனம்** |
| *13-11-77 ஞாயிறு* | *தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்* |
| *மாலை 4.30 முதல் 6.30 வரை* | *பேசுவோர்: டாக்டர். என். வீழிநாதன் (தமிழ்)* |
| | *டாக்டர். ஆர். பாலசுப்பிரமணியம் (ஆங்கிலம்)* |
| **சத் சங்கம்:** ஞாயிறுதோறும் | *மாலை 4 மணி முதல் 8 மணி வரை* |
| *மாலை 4 முதல் 4.20 வரை* | *ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (13-11-77 & 27-11-77)* |
| | *ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (20-11-77)* |
| *மாலை 4.20 முதல் 4.30 வரை* | *தியானம்* |
| *மாலை 4.30 முதல் 5.30 வரை* | *சொற்பொழிவு (தமிழ்)* |
| | *1.* **ஸ்ரீமத் பாகவதம்**—*திரு 'அண்ணா' சுப்பிரமண்யம் (6-11-77)* |
| | *2.* **ஸ்ரீமத் ராமாயணம்**—*டாக்டர். என். வீழிநாதன் (20-11-77 & 27-11-77)* |
| *மாலை 5.35 முதல் 6.30 வரை* | *சொற்பொழிவு (ஆங்கிலம்)* |
| | *1.* **ஸ்ரீமத் பகவத்கீதை**—*சுவாமி கபீரானந்தர் (6-11-77)* |
| | *2.* **பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்**—*சுவாமி தபஸ்யானந்தர் (20-11-77 & 27-11-77)* |
| **சிறப்புச் சொற்பொழிவுகள்:** | *1.* **நாராயணீயம்**—*திரு க. கோதண்டராமன் (12-11-77 & 19-11-77)* |
| சனிக்கிழமைகளில் மாலை 5.45 மணிக்கு | *2.* **இராமாயணத்தில் ஆராய்ச்சி** —திரு. பி. இராமகிருஷ்ணன் *(26-11-77)* |

**விஞ்ஞானம் பற்றிய தொடர் சொற்பொழிவுகள்:** *மாலை 5.30 மணிக்கு*

| | |
|---|---|
| *5-11-77* சனிக்கிழமை | *பொருள்:* **இரத்த அழுத்தம்**—*டாக்டர். கே. ஜி. கிருஷ்ணசுவாமி* |

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்**—*(மாலை 5-30)*

| | |
|---|---|
| திங்கள்: (இரவு 7 மணிக்கு) | *(ஆங்கிலம்) ஈசாவாஸ்ய உபநிஷதம்—சுவாமி கீர்த்திதானந்தர்* |
| செவ்வாய்: | *(ஆங்கிலம்)* ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்—*சுவாமி கபீரானந்தர்* |
| புதன்: | *(தமிழ்)* மகாபாரதம்—திரு 'அண்ணா' சுப்ரமண்யம் |
| வியாழன்: | *(தெலுங்கு)* தியாகப் பிரம்மம்—*சுவாமி சுவாத்மானந்தர்* |
| வெள்ளி: | *(தமிழ்)* ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள் —பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா |
| வெள்ளி: | *(ஆங்) ஸ்ரீமத் பகவத்கீதை மாலை 6.30—சுவாமி கோலோகானந்தர் (ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம், 18, தெற்கு மாட வீதி,* திருவல்லிக்கேணி.) |

| | |
|---|---|
| **விசேஷ தினங்கள்:** | *அந்தர் யோகம் (சாதனை தினம்)—ஞாயிறு (20-11-77)* |
| *10-11-77 வியாழன்:* | காளி பூஜை—தீபாவளி *(மாலை வழிபாட்டிற்குப் பிறகு)* |
| *22-11-77 செவ்வாய்:* | சுவாமி சுபோதானந்தர் ஜயந்தி |
| *24-11-77 வியாழன்:* | சுவாமி விஞ்ஞானானந்தர் ஜயந்தி |
| | *ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்:* ஏகாதசி தினங்களில் *ஆரதிக்குப் பிறகு (7-11-77 & 21-11-77)* |

*அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.*

*தலைவர்,*

தொலைபேசி: **71231** — ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

ஆசிரியர்: சுவாமி சித்கனானந்தர்; துணை ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்
பதிப்பாளர்: சுவாமி சித்கனானந்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004
அச்சிடுபவர்: S. ராமஸ்வாமி, ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ், 97 லாய்ட்ஸ் ரோடு, சென்னை 600086